



பல்லவி

இந்தரிகி அபயம்பு லிச்சு செய்யி
கந்துவகு மஞ்ச்சி பங்காரு செய்யி

சரணம்

வெலலேனி வேதமுலு வெதகி தெச்சின செய்யி
சிலுகு குப்பலி கிந்த சேர்ச்சு செய்யி
கலிகியமு பூகாந்த கௌகிலிஞ்ச்சின செய்யி
வலனைன கொனகோள்ள வாடி செய்யி

சரணம்

தனிவொக பலிசேத தான மடிகின செய்யி
வனரங்க பூதான மொஸகு செய்யி
மொனஸி ஜலநிதியம்மு மொனகு தெச்சின செய்யி
எனய நாகேலு தரியுஞ்சு செய்யி

சரணம்

புறஸதுல மானமுலு பொல்ல சேஸின செய்யி
துறகம்பு பரபெடி தொட்ட செய்யி
திருவேங்கடாசலா தீசுடை மோட்சம்பு
தெருவு ப்ரானுலகெள்ள தெலிபெடி செய்யி

--அன்னமய்யா கீர்த்தனை

[இக்கீர்த்தனையில் வேங்கடவனின் 'அபய அஸ்தம்' புகழ் பேசப்பெறுகிறது. எல்லோர்க்கும் அபயம் அளித்துக் காத்திடும் கை; மாசு மருவற்ற தூயத்தங்கத்திருக்கை; விலைமதிப்பற்ற வேதங்களைத் தேடிக்கொணர்ந்த கை; மந்திரமலையை மத்தாக்கி ஆமையாக நின்று அமுதம் கடைய வழிவகுத்த கை; பூமியைப் பாய்போல் சுருட்டி எடுத்துச் சென்ற இரண்யாட்சனை அழித்து, பூமியை மீட்ட கை; இரண்யகசிபுவின் மார்பைக் கிழித்தக் கூரிய நகங்களைக் கொண்ட திருக்கை.; தனியனாக வந்து பலியிடம் பிச்சைக்கேட்ட கை; களியபருக்கு பரசுராமராக வந்து பூமியைத் தானமாகக் கொடுத்த கை; இராமனாகத் தோன்றி தன் அம்பால் சமுத்திரராஜனைப் பணியவைத்த கை; பலராமனின் உருவத்தில் மழுப்படையை ஏந்திய கை; திரிபுராசுரர்களின் மனைவிமார்களின் மனதைக் கலைத்த அழகுமிகு கை; குதிரை மீதேறி குவலயம் காக்க வந்த பெரியதொரு கை; இவ்வாறான கையானது முக்தி எனும் பேரின்பத்தைத் தர திருவேங்கடவனது அபயக்கரமாக இன்று விளங்குகிறது. மேலும் உலக உயிர்களுக்கெல்லாம் உய்யும் வழிகாட்டும் அழகுக் கையிது. பெருமைமிகு அக்கையினை வணங்குவோமாக.]

# ஸப்தகிரி

**மே - 1995**

தனிப்பிரதி ரூ. 2
வருடச்சந்தா ரூ. 24

மலர் 25
இதழ் 12

சிறப்பாசிரியர் :
திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati

## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : ஸ்ரீவேங்கடேஸ்வரர் சுவாமி திருக்கோயில் -ரிஷிகேஷ் (உ.பி.) |
| முதல் உள்ளட்டை | : ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வர சுவாமி (கருட வாகனத்தில்) -நாராயணவனம். |
| 2-வது உள்ளட்டை | : ஸ்ரீ அன்னமாசார்யர் |
| பின்னட்டை | : ஸ்ரீநரசிம்ம சுவாமி திருக்கோயில், அந்தர்வேதி. |
| உள்ளே | : திருமலைக்கோயில் உத்ஸவர் திருக்கோலங்கள் |

JAGADISH

## உங்களுடன்

சங்ககாலப் புலவர்கள் முதல் மக்கள் கவிஞர் கண்ணதாசன் வரை கவிஞர்கள் பலர் ஏழுமலையான் மீது தங்கள் பக்தி உணர்வுகளைத் தங்கள் எழுத்துக்களால் வெளியிடவே செய்தனர். இது காலம், கலாச்சாரம், மொழி, இனம், இடம் போன்ற பாகுபாடுகளைக் கடந்து நிற்கும் 'வேங்கடவன் பக்தி நெறி'யினையே பறை சாற்றுகின்றது. காலத்தை வென்ற கவிஞர்களால் இயற்றப்பெற்ற அவர்கள்தம் பக்திப்பாக்களில் திருமலையானின் அருட்திறமும், திருமலையைப்பற்றிய இலக்கிய இயற்கை வளமும் கொந்தளிக்கவே செய்கின்றன. ஆனால், கவிஞர்கள் பலர் வேங்கடவனைப் பாடிப்பரவி இருந்தாலும் அவர்களிடமிருந்து ஆழ்வார்கள் தனித்தே விளங்குகின்றனர். அவர்கள்தம் 'வைணவ நெறி' பக்தி உணர்வும், மாயவனின் அழகுத் திருமேனியின் அழகில் அவர்கள் ஆழங்கால்பட்ட கலை வெளிப்பாடும், வேத, புராண அறிவில் வெளிப்பட்ட அவர்கள் தம் தத்துவ விளக்கமும் அவ்ஆழ்வார்களை குன்றின்மேல் இட்ட பெருந்தீயாக ஒளிர்விடச் செய்தன. எனினும் தங்கள் பாசுரங்களின் மூலம் அவர்கள் அறிவுறுத்திய வைணவத் தத்துவ விளக்கங்களையும், கவிதையாற்றலையும் சமுதாயத்தின் ஒருநிலையினரே பயின்று அனுபவத்திட முடிந்தபோது, ஆழ்வார்களின் உள்ளக்கிடக்கையை விளக்கிட, விளக்கி நம்மை மகிழ்ந்திடச் செய்ய ஆசார்யர்களும், உரையாசிரியர்களும் நமக்கு இன்றியமையாதனராக இருந்தனர். அப்போதும் படித்தோறும், தீவிர பக்தி நெறியாளர்கள் மட்டுமே அவ்விளக்கங்களை அறிந்து இன்புற முடிந்தது. ஏனெனில் நாளும் எதிர்கொள்ளும் சமுதாய , பொருளாதார பிரச்சனைகளால் காலமும், வாய்ப்பும் இல்லாத சாமான்யர்களால் சமயத்தின்பால் ஈடுபாடுகொள்ள முடியவில்லை. பின்னர் வந்த சிற்றிலக்கியங்கள் ஒரு சிறிது அவர்களுக்கு உதவி புரிந்தாலும் 'இலக்கணம்' ஒரு தடுப்புச்சுவராக அமைந்தபோது கீர்த்தனைகளும், பனுவல்களும், உரைநடைக் கவிதைகளும், புதுக்கவிதைகளும் பெரும் வரவேற்பை மக்களிடையே பெற்றன. கீர்த்தனைகளில் கையாளப்படும் சொற்களும், எளிமைக் கருத்துக்களும், இசையும் சமயத்தை சாமான்யரிடம் அழைத்துச் சென்றது. கேட்பது ஒன்றினாலேயே பெறப்படும் இச்சமய உணர்வினைத் துண்டிடும் கீர்த்தனைகள் மக்களிடையே பெரிதும் வரவேற்கப்பட்டன. இதனால் புரந்தரதாஸர் போன்ற கன்னட தாஸர்கள், சங்கீத மும்மூர்த்திகள், பாரதியார், கோபாலகிருஷ்ண பாரதி, பாபநாசம் சிவன் போன்றுர் இயற்றிய பக்தி கீர்த்தனைகள் சமய விழிப்புணர்வுகளுக்குப் புதுப்பாதை வகுத்தன.

இவர்களுள் கி.பி. 15ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த ஆந்திரமாநிலத்தின் ஸ்ரீதாள்ளபாக்கம் அன்னமாசாரியார் தெலுங்கு மொழி வரலாற்றில், பக்தி இலக்கிய இசை உலகில் ஒரு விடிவெள்ளியாகத் தோன்றினார். பொதுவாக அடியார்களின் கீர்த்தனைகளில் 'சரணுகதி' தத்துவமே அடிப்படைக்கருத்தாக விளங்கிட்ட போது, அன்னமய்யாவின் கீர்த்தனைகளில் இலக்கிய சுவைமட்டுமன்றி, இந்து சமயக்கருத்துக்கள், குறிப்பாக வைணவ நெறி வழிநின்று விளக்கப்பட்ட நயம் அன்னமய்யாவின் அருட்திறத்தையும், வைணவ ஈடுபாட்டினையும் படம் பிடித்துக் காட்டின. அதுமட்டுமின்றி வேத விளக்கங்கள், புராணச்செய்திகள் ஆகியவற்றை ஆழ்வார்கள் அடியொற்றி சென்று, சங்ககால இலக்கிய தாக்குதல்களையும் தன்னகத்தே பெற்று திருவேங்கடவன் மீது அவர் இயற்றிய சுமார் முப்பத்திரண்டாயிரம் கீர்த்தனைகள் 'வேங்கடவன் பக்தி நெறி' பரவ அடிகோலியன. இசை இலக்கியத்தில் முதன்முதலாக பல்லவி, சரணம் எனும் உத்திகளைக் கையாண்டு 'பத கவிதா பிதா மஹா' எனும் பெயரினைப் பெற்றுத்தந்ததுமல்லாமல் மேலும் அவர்தம் கீர்த்தனைகளில் பொதிந்துள்ள எளிமைச் சொற்களும், உவமைகளும், வழக்குமொழிகளும், சமுதாய சீர்திருத்த எண்ணங்களும், அன்னமய்யாவை பக்தி உலகின் 'மறுமலர்ச்சியாளராக' அறிமுகம் செய்தன. ஆழ்வார்கள்தம் பாசுரங்களில் ஒரு சிறிது இடங்கள் நீங்கலாக, பெரும்பாலும் அவ்திவ்ய தேச மூர்த்திகளைப் பாடும்போது அம்மூர்த்திகளுக்கே தனிச்சிறப்பு அளித்துப் பாடிட்ட போது, அன்னமய்யா மட்டும் தாம் கண்டு அனுபவித்த பல்வேறு திவ்யதேச மூர்த்திகளை வேங்கடவனாகவே கண்டு பாடவும் செய்தது அவருடைய வேங்கடப்பற்றினை இனம் காட்டியது. அவர் இயற்றிய 32000 கீர்த்தனைகளில் தற்போது சுமார் 2700 மட்டுமே கிடைக்கப்பெற்றுலும் அவற்றில் காணப்படும் பக்தி மற்றும் காதற் சுவைமூலம் அவர் பரப்பிய சமய உணர்வானது அவர்தம் இலக்கிய, பக்தி மற்றும் இசை ஆற்றலை வெளிப்படுத்தி அன்னமய்யாவை பக்தி - இசை உலகில் உயர்த்திக் காட்டியது.

இவ்வகையில் அன்னமய்யா தம் கீர்த்தனைகளின் மூலம் அவர் ஒரு தீவிர வைணவ நெறியாளர், தத்துவச் சுடர், இலக்கியச் செம்மல், சீரிய சிந்தனையாளர், அரிய இசைக்கலைஞர், சிறந்த சமயவாதி என்பதை நிரூபித்துக் காட்டியுள்ளார். அன்னாரின் சிறப்பினையும், பெருமையினையும் நாட்டில் பரப்பிடும் முகத்தான் திருமலை திருப்பதி தேவஸ்தானம் தன் 'அன்னமாசார்யா திட்டத் துறை' எனும் அமைப்பின் கீழ் அவர்தம் 'நினைவுநாள்', 'பிறந்தநாள்' விழாக்களை ஆண்டுதோறும் நாட்டின் பல்வேறு முக்கிய இடங்களில் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனும் நோக்கில் கொண்டாடி வருகின்றது. இதுபோன்ற விழா வாய்ப்புகளைப் பயன்படுத்திக்கொண்டு அன்னமய்யாவின் அருளமுதைப் பருகிடவே சமயம் மற்றும் இசை உலக அன்பர்களை தி.தி. தேவஸ்தானம் கேட்டுக்கொள்கின்றது.

# செய்திச் சுருக்கம்

## 1995 - 96
### வரவு செலவுத்திட்டம்

1995-96ஆம் ஆண்டில் தி.தி. தேவஸ்தானத்தின் வரவு ரூ. 194.97 கோடியாக இருக்கு மென்று எதிர்பார்க்கப்படுகிறது. செலவு ரூ. 193.63 கோடியாக இருக்கும் என்று கணக்கிடப் பட்டுள்ளது.

உண்டியல் மூலமாக ரூ. 69.08 கோடி, காட்டேஜ் கட்டணமாக ரூ. 10 கோடி, பிரஸாத விற் பனையாக ரூ. 12.50 கோடி, ஆர்ஜித கட்டணமாக ரூ. 18.80 கோடி, சிறப்பு நுழைவு சீட்டு விற்பனை மூலமாக ரூ. 12.50 கோடி போன்றன வரவில் முக் யமானவையாகும். செலவுத் தொகையில் நிருவாகச் செலவு 18 கோடி, ஊதியர் ஊதியமாக ரூ. 50 கோடி, நன்கொடைகள் ரூ. 28.18 கோடி, பூசை, பிரஸா தங்களுக்காக ரூ. 37.69 கோடி ஆகியன அடங்கும்.

* * *

### வசந்தோத்ஸவம்

திருமலையில் 12-4-95 முதல் 14-4-95 வரை மூன்று நாட்க ளுககு வசந்தோத்ஸவம் எனும் ஆண்டு விழா வெகுச் சிறப் பாக நடைபெற்றது. இவ்வாண் டுதான் முதன் முதலாக உத் ஸவர் தன் பெண் துணைத் தெய்வங்களுடன் தங்கத்தேரில் எழுந்தருளி திருமலை மாடவீ திகளில் திருவுலா மேற்கொண் டார். வசந்த மண்டபத்தில் திருமஞ்சன நிகழ்ச்சி நடை பெற்றது.

* * *

### ஸ்ரீராமானுஜர் ஜெயந்திவிழா

978-வது ஸ்ரீமத் இராமானுஜா சாரியார் அவதாரத் திருவிழா திருமலை திருப்பதி தேவஸ் தான ஆழ்வார் திவ்வியப் பிரபந்தத்திட்டத்துறை சார்பில் ஏப்ரல், 28, 29, 30 ஆகிய மூன்று நாட்கள் நிகழ்ந்தன.

ஸ்ரீமத் இராமானுஜாசாரியார் உலகுக்கு ஆற்றிய தொண் டினை கைங்கர்யம், தத்து வம், சமயமும் நித்திய வழி பாடும் என்ற மூன்று நோக் கில் தொடங்கிய இந்த முந்நாள் விழாவின் தொடக்கம் திரும லையில் தொடங்கியது. ஸ்ரீமத் பரம ஹம்ஸ பரிவ்ரஜாசார்ய திருவேங்கட ராமானுஜ பெரிய ஜீயர் அவர்கள் மங்களா சாச னத்துடன் விழா தொடங்கி யது. திவ்வியப் பிரபந்த கோஷ் டிகள் பாராயணம் பிரார்த்தனை யாக அமைந்தது. செயலாட்சித் தலைவர் ஸ்ரீமான் என். ரமேஷ் குமார் தம் தலைமை உரையில் இராமானுஜருக்கும் திருமலைக் கும் உள்ள தொடர்பு பற்றியும் திருமலை திருப்பதி தேவஸ்தா னம் பொதுவாக இந்திய மக்களுக்கு, சிறப்பாக இந்துக் களுக்கு இறை வழிபாட்டிற்கும், ஒழுக்க மேம்பாட்டிற்கும் ஆற் றிவரும் பணி பற்றியும், திவ்வி யப் பிரபந்தத் திட்டம் அவ்வ ழியில் ஆற்றிவரும் செயல்கள் பற்றியும் எடுத்துரைத்தார்கள்.

திருமலை அனந்தாண்பிள்ளை பரம்பரையில் தோன்றி இன் றும் திருமலையில் திருமலை யப்பனுக்குக் கைங்கரியம் செய் துவரும் ஸ்ரீமான் T.R. அனந் தாசாரியார் சுவாமியை செய லாட்சித் தலைவர் ஸ்ரீனிவா சன் பொன்னாடை அணிவித் துப் போற்றினார்கள். திருப் பதி மருத்துவக்கல்லூரி விரிவு ரையாளர் தேவேந்திரப்பிள்ளை அவர்களின் பாசுர நாட்டிய நிகழ்ச்சி நிகழ்ந்தது.

29-4-95 சனியன்று காலை 11 மணி அளவில் ஸ்ரீமத் ராமானுஜர் இயற்றியரு ளிய விசிட்டாத்துவைத தத்து



வமாகிய ராமாநுஜ தரிசனம் குறித்து திருவேங்கடவன் பல்கலைக் கழக செனட்ஹாலில் கருத்தரங்கு ஒன்று பல்கலைக் கழகத் தத்துவத் துறையோடு இணைந்து நிகழ்ந்தது. முன்னாள் செயலாட்சித் தலைவரும், இந்தியப் பிரதமரின் பத்திரிகைத்தொடர்பு ஆலோசகருமான திரு. பி.வி.ஆர்.கே. பிரசாத் அவர்கள் இராமாநுஜர் திருவுருவப்படம் திறந்துவைத்து திட்டங்கள் பலவற்றின்வழி தேவஸ்தானம் ஆற்றிவரும் பணியைப் பாராட்டிப் பேசினார்கள். வரவேற்புரையில் செயலாட்சித் தலைவர் ஸ்ரீமான் என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ். அவர்கள் அனைவரையும் வரவேற்று ஸ்ரீமத் ராமாநுஜரின் அரியபணியை எடுத்துரைத்தார்கள். சிறப்பு விருந்தினராக வருகை புரிந்த பேராசிரியர் கே. சச்சிதானந்த மூர்த்தி அவர்கள்ஆழ்வார், ஆச்சாரியர்தம் அறிவார்ந்த, அன்பார்ந்த சமய, சமுதாயச் சிந்தனைகளை, செயற்பாட்டினை எடுத்துரைத்தார். பேராசிரியர் கே.எஸ். இராமச்சந்திரா ஆழ்வார்கள்தம் பக்திநெறியைப்



பலவாறு பாராட்டியுரைத்தார். பல்கலைக்கழக துணைவேந்தர் ஸ்ரீமான் ஆர். ராமமூர்த்தி, தலைமை தாங்கி வழிநடத்தினார். T.C.A. ராமாநுஜம், டாக்டர் எம். வரதராஜன், ஸ்ரீமான் வேங்கடாசாரியார், பேராசிரியர் C. ராமய்யா ஆகியோர் கருத்தரங்கக் கட்டுரைகள் படித்தனர். ஸ்ரீமான் தேவநாதன் M.A. B.L. அவர்கள் இராமாநுஜரின் சமுதாய சமயப் பணி பற்றி அனுப்பிய செய்தியைச் சிறப்பு அலுவலர் பேராசிரியர் பொன். சௌரிராஜன் படித்தார். பேராசிரியர் திரு. C. ராமய்யா அவர்கள் நன்றி கூற விழா இனிது முடிந்தது.



மூன்றும் நாளான நிறைவு விழாவில் ஜீயர் சுவாமி எழுந்தருளி மங்களாசாசனம் செய்தருளினார். சமஸ்கிருத பல்கலைக் கழகத் துணைவேந்தர் தலைமைதாங்கி ஆழ்வார் திட்டம் ஆற்ற வேண்டிய பணி பல பற்றி எடுத்துரைத்தார். ஸ்ரீமான் உ.வே. கிருஷ்ணமாச்சாரியார் சுவாமிகள் திருமலைக்கும் ஸ்ரீமத் இராமாநுஜாசாரியர்க்கும் உள்ள தொடர்பு பற்றிச் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். ஸ்ரீரங்கம் சூடாமணி சகோதரிகள் ஆழ்வார் பாசுர சங்கீத கச்சேரியுடன் திரு. ஆர். வெங்கடரமண ரெட்டியின் நன்றியுரையுடன் விழா இனிது நிறைவேறியது.

பொன். சௌரிராஜன்
சிறப்பு அலுவலர்



இலங்கையில் அசோக வனத்தில் பிராட்டியைத் தன் கண்களால் பார்ப்பதாக, நெடுந் தொலைவு நோக்கும் வல்லமை படைத்த ஸம்பாதி, வானர வீரர்களிடம் உறுதியாகச் சொல்லிவிட்டார்.

சமுத்திரத்தைக் கடந்து சென்றால் சீதையைக் கண்டு வரலாம். ஆனால், இலங்கையோ, அலை பாயும் சமுத்திரத்தில் நூறு யோசனைக்கு அப்பால் இருக்கிறது. எல்லா வானரங்களாலும் கடலைத்தாண்டிச் செல்ல முடியாதுதான். ஆனால், பேராற்றல் படைத்த வானரத் தலைவர்கள இருக்கிறார்களே?

கஜன் என்பவன், 'பத்து யோசனை தூரம் தாண்டுவேன்' என்றான். கவாக்ஷன், இருபது யோசனை செல்வானாம். கவயன் முப்பது யோசனையும், சரபன் நாற்பது யோசனை தூரமும் தாண்டுவார்களாம். ஆனால், போக வேண்டிய தூரம் நூறு யோசனை! அவ்வளவு தூரத்தையும் கடந்து திரும்பி வந்தாக வேண்டும்.

ஆஞ்ஜநேயனை விட்டால், வேறு வழியில்லை.

ஜாம்பவான் அருகே வந்து, ஆஞ்ஜநேயன் மறந்திருந்த அவருடைய அளப்பரிய ஆற்றலை சாங்கோபாங்கமாக எடுத்துரைக்கவே, ஹனுமானுக்கு ஆவேசமே வந்துவிட்டது.

ததஸ்து வை ஜாம்பவதா
ப்ரசோதித: ப்ரதீதவேக:
பவனாத்மஜ: கபி: ।
ப்ரஹர்ஷயம்ஸ்தாம் ஹரிவீர
வாஹினீம் சகார
ரூபம் மஹாத்மனஸ்ததா ।।
(கிஷ்கிந்தா 66-40)

வானுக்கும் பூமிக்குமாகப் பெரிய உருவத்தை எடுத்துக் கொண்டு மலையுச்சியிலிருந்து வெகுவேகமாகப் புறப்பட்டார் வாயுகுமாரன்.

போகும் வழியிலேயே தடங்கல்கள். மைனாகம், ஸுரஸா, ஸிம்ஹிகா என்ற இடையூறுகளைக் கடந்து, இலங்கையில் வந்து காலடி வைத்தாயிற்று. அங்கேயும் முதல் ஸம்ஹாரம் இலங்கிணிதான். இவ்வளவு இன்னல்களையும் எதிர்த்து நின்று வெற்றிகொண்டு லங்கா நகரத்தில் புகுந்த பின்னராவது சுலபமாக வெற்றி கிடைத்ததா, ஹனுமானுக்கு?

அப்படி இக்கட்டுகள் எதிர்ப்பட்டபோது, மனம் தளர்கிற வேளையிலெல்லாம், தன்னைத் தானே உற்சாகப்படுத்திக்கொள்வதற்கு ஓர் அனுபவ முறையைக் கண்டறிந்திருந்தார், மாருதி.

கண்டிப்பாகப் பிரச்னையை நீக்கி வெற்றியைத்தேடித் தருகிற அனுபவமுறை!




# சுந்தரகாண்டத்தில் ராமாயணங்கள்

திரு. டி.எஸ். கோதண்டராமன் - தஞ்சாவூர்.

அதுதான், ராமாயணத்தை - இடத்திற்கு ஏற்றபடி சுருக்கியோ, நீட்டியோ - ஒரு முறை வாய்விட்டுப் பாராயணம் செய்து விடுவது!

இவ்விதமாக சுந்தரகாண்டத்தில் மட்டும் ஐந்து தடவைகள், ராமாயணத்தைச் சொல்லியிருக்கிருர், ஆஞ்ஜநேயர்.

ராட்சஸ உருவத்தை எடுத்துக் கொண்டு குகை போல வாயைப் பிளந்துகொண்டு, 'நான் உன்னைச் சாப்பிடப் போகிறேன்; என் வாய்க்குள் புகுந்துவிடு' (அஹம் த்வாம் பக்ஷயிஷ்யாமி ப்ரவிசேதம் மமானனம் - சுந்தர. I - 156) என்று அதட்டுகிருள் ஸுரஸை.

ஹனுமான் பயந்துபோய் விடவில்லை. பயந்து போகாதது மட்டுமல்ல, மகிழ்ச்சியே அடைந்தாராம். 'ப்ரஹ்ருஷ்ட வதன: ஸ்ரீமான்' என்றெல்லாம் அடைமொழி கொடுத்துப் பேசுவார், வால்மீகி.

கையெடுத்துக் கும்பிட்டார், ஹனுமான். 'அம்மா தாயே!... ராமாயணம் சொல்கிறேன். கேளுங்கள். 'ராமோ தாசரதி: ஸ்ரீமான் ப்ரவிஷ்டோ தண்டகாவனம்!...' இலக்குவனோடும் சீதையோடும் வனத்தில் இராமர் வசிக்கத் தொடங்கினார். அரக்கர்களோடு தர்மாத்மாவான இராமனுக்கு எப்போதும் பகை. ராட்சஸ மன்னன் இராவணன், சீதையைத்தூக்கிக்கொண்டு போய்விட்டான். இராமன் கட்டளைப்படி, பிராட்டியிடம் தூது சென்று கொண்டிருக்கிறேன். இந்த ராமகைங் கர்யத்தில் நீயும் உதவிசெய்யலாம். அல்லது பிராட்டியைச் சந்தித்து, இராமனிடம் செய்தி தெரிவித்துவிட்டு,

(ஆகமிஷ்யாமி தே வக்த்ரம் ஸத்யம் ப்ரதி ஸ்ருணோமி தே ।) - சத்தியமாகச் சொல்கிறேன், உன் வாய்க்குள் புகுந்துவிடுகிறேன்!

இப்போது, என்னைப் போக விடு, தடுக்காதே...'

ஆனால், அவள் விடவில்லை. அவரும் அடங்கிப் போய்விடவில்லை. சாமர்த்தியமாக அவள் வாயில் புகுந்து வெளியே வந்துவிட்டார்!

தோற்றுப் போனதால் ஸுரஸையும் அவருக்குச் சாபம் கொடுக்கவில்லை. 'சென்று வா; வென்று வா' (கச்ச ஸௌம்ய யதாஸுகம் । ஸமாநயஸ்வ வைதேஹீம் ராகவேண மஹாத்மனா ।। சுந்: I-168) என்று ஆசீர்வதித்தே அனுப்பி வைக்கிருள்.

அசோக வனத்தில், சீதைக்கு நல்ல சகுனங்கள் தோன்றுகின்றன. காரிருளில் திக்குத் திசை புலனாகாமல் தவித்துக் கொண்டிருந்தபோது எங்கோ தொலை தூரத்தில் ஓர் ஒளிக்கீற்று தெரிகிறது.

சீதைக்கும் த்ரிஜடைக்கும் இடையே நடந்த சம்பாஷணையை ஹனுமான் கேட்டுக்கொண்டிருந்தார்; சீதையை ராட்சஸிகள் பயமுறுத்தி, அதட்டி மிரட்டியதையும் கண்களால் கண்டார். "இந்த நிலையில், மேற்கொண்டு என்ன செய்வது?' என்ற கவலை வந்துவிட்டது அவருக்கு. (ததோ பஹுவிதாம் சிந்தாம் சிந்தயாமாஸ வானர: । சுந்தர - 30:2)

அன்னையிடம் பேச்சை எப்படி ஆரம்பிப்பது? வானர உருவத்திலிருந்தபடியே பேசலாமா? மனித உருவம் எடுத்துக் கொள்ளலாமா? மோலோர் மொழியில் பேசலாமா? அல்லது, என் மொழியிலேயே பேசலாமா?... இராவணன்தான், தன் மாய சக்தியினால், வேற்றுருக் கொண்டு வந்திருக்கிறுன் என்று பிராட்டி சந்தேகப் படாமலிருக்க வேண்டுமே?

திடீரென்று ஹனுமானுக்கு ஒரு யுக்தி பளிச்சிட்டது.

'ராஜா தசரதோ நாம
ரதகுஞ்ஜரவாஜினாம் ।
புண்யசீலோ மஹாகீர்த்தி:
ருஜுராஸீன் மஹாயசா: ।।
(சுந்தர. 31:2)

மஹா சக்ரவர்த்தி தசரதன் இந்திரனையொத்த பலம் உடையவர்; ராஜரிஷி. அவருடைய மூத்த குமாரன், சந்திரன் நிகர்த்த அழகுடைய இராமன்; வில்லாளி. வாக்குத் தவருத மன்னனின் ஆணைப்படி, தன் மனைவியோடும் சகோதரனோடும் காட்டுக்கு ஏகினான். காட்டில், பற்பல அரக்கர்களைக் கொன்ருன். ஜனஸ்தானத்தில் கர-தூஷணர்கள் கொல்லப்பட்டார்கள் என்பதறிந்த இராவணனால், சீதை வஞ்சகமாகத் தூக்கிச் செல்லப் பட்டாள். சீதையைத் தேடிக் கொண்டு வந்த இராமனுக்கு, சுக்ரீவனோடு நட்பு ஏற்பட்டது. சீதையைத் தேடிக்கண்டு வரும்படி, ஆயிரக்கணக்கான வானரர்கள் எட்டுத் திசைகளிலும் அனுப்பப்பட்டிருக்கிருர்கள். ஸம்பாதியின் சொற்படி, சமுத்திரத்தைத் தாண்டி நான் இங்கே வந்திருக்கிறேன்....'

இந்த ராமாயணத்தைக் கேட்ட மாத்திரத்தில், சீதைக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டா

யிற்று! (ஜானகீ சாபி தச்ருத்வா விஸ்மயம் பரமம் கதா । சுந்தர 31:17 )

தொடர்ந்து, சீதையின் அச்சத்தைப் போக்கி, ஹனுமான் உரையாடத் தொடங்கிவிட்டார் என்பது தெரிந்த கதைதானே?

உங்களைப் பார்த்தால் அன்னை சீதை என்றே கருதுகிறேன். ஸத்யபராக்கிரமமுடைய இராமன் சொன்ன லட்சணப்படியே தாங்கள் விளங்குகிறீர்கள். தாங்கள், சீதை தானே? (ஸீதா த்வமஸி பத்ரம் தே தன்மமா சக்ஷ்வ ப்ருச்சத:)' என்று வணக்கத்துடன் வினவிய ஹனுமானிடம் தயக்கமில்லாமல் பேசத் தொடங்கினாள் சீதை.

'ஜனகன் மகள்; தசரதனின் மருமகள்; இராமசந்திரனின் தர்மபத்னி - நான்தான்.

துஹிதா ஜனகஸ்யாஹம்
வைதேஹஸ்ய மஹாத்மன: ।
ஸ்னுஷா தசரதஸ்யாஹம்
சத்ருஸைன்ய ப்ரமாதின: ।।
ஸ்ர்தாசநாம நாம்னாஹம்
பார்யா ராமஸ்த தீமத: ।
(சுந்தர 30:16, 17)

பர்த்தாவைப் பிரிந்து வாழவே எனக்குப் பிடிக்கவில்லை. இராவணன் வஞ்சகமாக என்னைக் கவர்ந்துவந்து சிறை வைத்திருக்கிறான்...' என்றெல்லாம் பேசிய பின்னரும் கூட பிராட்டியின் ஐயம் தெளியவில்லை!

வைதேஹி குசலீ ராமஸ்த்வாம்
ச கௌசலமப்ரவீத்: ।
லக்ஷ்மணஸ்ச்ச மஹாதேஜா
பர்த்துஸ்தே னுசர: ப்ரிய: ।।
க்ருதவாஞ்சோக ஸந்தப்த:
சிரஸா தே பிவாதனம் ।

என்று, மேலும் செய்திகளைச் சொல்லிக் கொண்டு சற்று அருகே வர முயல்கிறார், ஹனுமான்.

'அடடா... ஏமாந்துவிட்டேனே?... இது, ராவணன் தான்... வேறு உருவம் எடுத்துக்கொண்டு என்னை ஏமாற்ற வந்திருக்கிறான்... கஷ்டம்.... கஷ்டம்...' என்று மீண்டும் சீதை நொந்துகொள்ளவே, ஹனுமானுக்குச் சங்கடமாகப் போய்விட்டது. 'சீதைக்கு எப்படித்தான் நம்பிக்கை ஊட்டுவது?' என்ற பெரிய கவலையே வந்துவிட்டது.

ஸீதாயாஸ்ச்சிந்திதம் புத்த்வா
ஹனுமான் மாருதாத்மஜ: ।
ச்ரோத்ரானுகூலைர்வசனைஸ்ததா
தாம் ஸம்ப்ரஹர்ஷயத்: ।।
(சுந்தர - 34:27, 28)

'சூரியன் போல் தேசு மிக்கவன்; சந்திரன் போல் குளிர்ந்த ஒளிவீசுபவன்; உண்மை தவருதவன், இனிமையாகப் பேசுபவன்... அப்படிப்பட்டவனை, மாயமான் வடிவில் வந்து, குடிலிலிருந்து வெகுதூரம் அழைத்துச் சென்று, உங்களைக் கவர்ந்து வந்துவிட்டான், அரக்கன். விரைவில் யுத்தத்தில் அவன் அழியப் போகிறுன். அனல் கக்கும் ராமபாணங்கள் அரக்கர்களை அழிக்கப்போகின்றன... தாயே, அந்த இராமனால் அனுப்பப்பட்டு இங்கே வந்திருக்கிறேன். தங்களைப் பிரிந்து இராமனும் மிகவும் துக்கப்படுகிறுர். லட்சுமணர் தங்களுக்கு வணக்கம் கூறச் சொன்னார். வானரர் தலைவனுக்கும் இராமனுக்கு நண்பனுமான சுக்ரீவன் தங்களுக்கு க்ஷேமத்தைக் கோருகிறுர். வானரப் படைகளோடு விரைவில் இராமன் இங்கே வரப்போகிறுர். சுக்ரீவனின் மந்திரி, நான் ஹனுமான் என்று பெயர்... நீங்கள் என்னை சந்தேகிக்க வேண்டாம்...'

இந்த ராமாயணத்தைக் கேட்டதும் சீதையின் சந்தேகமெல்லாம் அடியோடு ஒழிந்துவிட்டது!

'தாம் து ராமகதாம் ச்ருத்வா
வைதேஹீ வானரர்ஷபாத்: ।
உவாச வசனம் ஸௌம்யமிதம்
மதுரயா கிரா ।।
(சுந்தர 35:1)

"ஹனுமானே, அது சரி,... ஸ்ரீராமனுடன் உனக்கு எப்படி நட்புறவு ஏற்பட்டது? இலக்குவனை எவ்விதம் அறிவாய்?... குரங்குகளுக்கும் மனிதர்களுக்கு சிநேகம் என்கிருய்!"

"ஆமாம், இவ்வளவு நெருக்கமாக இராமனையும் லட்சுமணனையும் அறிந்திருப்பதாகச் சொல்லிக்கொல்கிருய், அப்படியானால், ராம-லட்சுமணர்களின் அங்கலட்சணங்களைக் கூறேன்..."

இப்படிக் கொக்கிப் போட்டு மாட்டுவதைப் போலப் பிராட்டி கேட்டவுடன் ஆஞ்ஜனேயனுக்குப் பரவசமே ஏற்பட்டிருக்க வேண்டும்.

கண்களை மூடிக்கொண்டான். இதயத்தில் ராமசந்திரன் காட்சி தந்தான்.

"அம்மையே!... என் இராமனைப் பற்றியா கேட்கிறீர்கள்?...

"ராமன்!... ஓ!... அவன் தாமரைக் கண்ணன்; ஸத்வ குணங்கள் நிரம்பியவன்; சூரியனைப் போல் ஒளிமிக்கவன். பொறுமையிலோ, பூதேவி!...

"வேத - வேதாங்கங்கள் அறிந்தவன், வில்வலன்!..."

"அழகு என்ருல் அப்படி ஓர் அழகு!"

"அவனுக்குத் தம்பி - ஸௌமித்ரி - லட்சுமணன். குணங்களில், அண்ணுவையே கொண்டுள்ளார். (அநுராகேண ரூபேண குணைஸ்சைவ ததா வித: ।।)

"உங்களைத் தேடிக்கொண்டுத் தெற்கு நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். ரிச்யமூக பர்வதத்தில், அண்ணனுக்குப் பயந்து வசித்துக் கொண்டிருந்த சுக்ரீவனைக் கண்டார்கள். நானே, இராம-லட்சுமணர்களை அழைத்துச் சென்று அறிமுகம் செய்வித்தேன்."

"இருவருக்கும் ஒரே மாதிரியான துக்கம் - மனைவியைப் பிரிந்த துயரம்!"

"உங்களை இராவணன் தூக்கிச் சென்றபோது, சில நகைக‌ளைக் கழற்றிப் போட்டீர்களே, அந்த நகைகளைக் கொண்டு வந்து காட்டினோம். அவைகளைக் கண்டு இராமன் தவித்துப் போய்விட்டார்."

"அப்புறம், வாலி வதம் ஆயிற்று. லட்சோப லட்சம் வானரர்கள் அண்டம் முழுவதும் அனுப்பப்பட்டுள்ளார்கள். உங்களைத் தேடிக்கண்டுபிடிக்க அவ்விதம் அனுப்பப்பட்டுள்ள தூதர்களில் ஒருவன் நான்!

"நாங்கள் எல்லோரும் உயிர்விடப்போகும் நேரத்தில், ஸம்பாதி தான் நல்வார்த்தை சொல்லிக்காப்பாற்றினார். அங்கதன் முதலியோர் அங்கே சமுத்திரக் கரையில் காத்துக் கொண்டிருக்கிறுர்கள். இரவில், நான் இலங்கையில் புருந்து இராவணனையும் பார்த்தேன். துயரக் கடலில் மூழ்கியுள்ள உங்களையும் பார்க்கிறேன்..."

'ஏதத்தே ஸர்வமாக்யாதம்
யதாவ்ருத்தமணிந்திதே ।
அபிபாஷஸ்வ மாம் தேவி
தூதோ தாசரதேரஹம் ।।
(சுந்தர - 35:72,73)

"நான் அஞ்ஜனாபுத்திரன்; வாயுகுமாரன்; ஹனுமான் என்று சொல்லுவார்கள்..."

இந்த ராமாயணத்தைக் கேட்ட பின்பும், சீதைக்கு நம்பிக்கை ஏற்படாமலா போகும்?

அளவு கடந்த மகிழ்ச்சி உண்டாயிற்றும் சீதைக்கு. "அதுலம் ச கதா ஹர்ஷம் ப்ரஹர்ஷேண ச ஜானகீ" என்கிறுர், வால்மீகி.

அசோக வனத்தில் நெடிதுயர்ந்த மரங்கள் சடசடவென வரிசை வரிசையாகச் சாய்க்கப்பட்டன. கெட்ட கனா கண்டதைப்போல அலறிப் புடைத்துக் கொண்டு கண்விழித்த அரக்கிகள், அதிசயமாக ஒரு குரங்கைக் கண்டு வியப்படைந்தார்கள். 'யாரடா, நீ?' என்ற கேள்விக்குப் பாறைகளும் மரங்களும் பதிலாகக் கிடைத்தன! ஓடிப்போய் கிங்கரர்கள் எனப்பட்ட படையினரை அழைத்து வந்தார்கள். கிங்கரர்கள் யமலோகம் அனுப்பப்பட்டார்கள்.

மரங்களை முறித்தால் மட்டும் போதுமா? மாளிகைகள் இன்னும் இருக்கின்றனவே. இப்படிச் சேதம் விளைவிக்கும் ஒரு குரங்கை விட்டு வைக்கலாமா? பிரஹஸ்தனுடைய மைந்தன் ஜம்புமாலி வந்து எதிர்த்து மாண்டான். தொடர்ந்து, மந்திரியின் மைந்தர்கள், சேனாதிபதிகளின் புத்திரர்கள், அட்சய குமாரன் முதலியோரும் மாய்ந்தனர்.

வேறு வழியில்லாமல், இந்திரசித்தனே வந்து பிரும்மாஸ்திரப் பிரயோகம் செய்ததும், மரியாதை நிமித்தமாகக் கட்டுப்பட்ட ஹனுமானை, இராவணன் சபைக்குக் கொண்டு வந்தார்கள்.

சபையையும் சபாநாயகனையும் கண்டு விக்கித்துப்போய் விட்டார், ஹனுமான்.

'அஹோ ரூபம் அஹோ தைர்யம்
அஹோ ஸத்வம் அஹோ த்யுதி: ।
அஹோ ராக்ஷஸ ராஜஸ்ய
ஸர்வலக்ஷணயுக்ததா ।।'
(சுந்தர-49:17)

இந்திரனையே வெற்றி கொண்ட வீரனை மைந்தனாகப் பெற்ற இவனை யாரால் வெல்லமுடியும்?

"உண்மையைச் சொன்னால், பிழைத்தாய்? யார் நீ?.. உருவம் மட்டும்தான், குரங்கு!... குபேரன் அனுப்பினானா? இல்லை, யமனா?... பொய் சொன்னாயோ, தொலைந்தாய், நீ... (அந்ருதம் வததஸ்சாபி துர்லபம் தவ ஜீவிதம்")

மிகவும் பயங்கரமான சூழ்நிலையில் சிக்கிக்கொண்டிருந்தார், ஹனுமான். வீராவேசத்துடன் எந்தச் செயலையும் நிறைவேற்றிக்கொள்ள முடியாத நிலை. அஸ்திரத்தை உதறிவிட்டுப் பறந்தே போய்விடலாம். சீதை?... இராமன்?... சுக்ரீவன்?... ஆனால் ஆஞ்ஜனேயனின் கவலையெல்லாம் ஒரு விநாடி நேரத்துக்குத்தான்! மலையையே தூக்கி எறிகிற மந்திரம் அவரிடம் இருக்கிறது.

"இராவணு, கேட்டுக்கொள்! வானரர் தலைவனான உனக்குச் சகோதரனைப் போன்ற - சுக்ரீவனின் ஆணைப்படி இங்கே வந்திருக்கிறேன்.. அவர், உங்களை ரொம்பவும் விசாரித்தார். தசரதன் என்று ஒரு

ராஜா. அவருக்கு இராமன்-லட்சுமணன் என்று குமாரர்கள். காட்டில் யாரோ, மைதிலியை வஞ்சகமாகத் தூக்கிச் சென்று விட்டார்கள். தேடிக் கொண்டே வருகையில், சுக்ரீவ ஸக்யம் ஏற்பட்டது. வாலி கொல்லப்பட்டார். இராவணு... (ராமேண நிஹத: ஸங்க்யே சரேணைகேன வானர: ।) ஒரே அம்பினால் வாலி கொல்லப் பட்டான். இப்போது சுக்ரீவன் தான் கிஷ்கிந்தை மன்னனாக்கும்! என்னைப் போல ஆயிரம் ஆயிரம் வானரவர்களை உலகெங்கும் அனுப்பியிருக்கிறுன். இப்படித் தேடிக்கொண்டே வந்தேனா, உன் அசோகவனத்தில் சீதையைப் பார்த்தேன். மகத்தான தவறு, இராவணு! பிறர் மனை நயத்தல் மகா பாபம். அத்துடன், உன்னை ஒழித்துக்கட்டுவதாக இராமன் சபதம் செய்திருக்கிறுர். எந்த தேவர்கோன் வந்து உதவினாலும் உன்னைக் காப்பாற்ற முடியாது!" (இந்த்ரோ மஹேந்த்ர ஸுரநாயகோ வா த்ராதும் ந சக்தா யுதி ராமவத்யம் ।) என்று சொல்லி முடித்தார் ஹனுமான். (சுந்தர - 51:45)

மிக விரோதமான சூழ்நிலையிலும் இராமகதையைச் சொல்லி நின்றவுடன், அவருக்கு ஓர் உதவி கிடைத்தது. வீடண்ணன் என்ற தர்மாத்மா, அவரைக் காப்பாற்றுகிறுன்.

ஆக, மாருதிக்கு இடுக்கண், மனக்கவலை, செய்வதறியாத தடுமாற்றம் ஏற்பட்ட போதெல்லாம் இராமகதையைப் பாராயணம் செய்து, உடனடியாகவே இடர்கள் நீங்கப்பெற்றுன் என்பதைக் காண்கிறோம்.

XXXXXX

# கண்ணீரஞ்சலி!



'ஸப்தகிரி'யின் வளர்ச்சிக்கு மூலகாரணராக மட்டுமின்றி, பத்திரிகையின் மேம்பாட்டுக்குத் தன் உழைப்பையும், முயற்சியையும் தொடர்ந்து சுமார் முப்பதாண்டுகளாகத் தந்திட்ட 'ஸப்தகிரி'யின் ஓய்வுபெற்ற முன்னாள் ஆசிரியர் திரு. காட்ரபாடி சுப்பாராவ் அவர்கள் தமது 59-ஆவது வயதில் சென்னை அப்போலோ மருத்துவ மனையில் 9–4–95 அன்று இயற்கை எய்தினார் என்பதை மிகவும், வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

சென்னையில் 'ஆந்திர பத்திரிகா' எனும் தெலுங்கு நாளேட்டின் உதவி ஆசிரியராகப் பணிபுரிந்து வந்த திரு. கே. சுப்பாராவ் அவர்கள், திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் செய்தி மடலின் ஆசிரியராக 1965 -இல் பதவி ஏற்றுர். ஆங்கிலம் உள்ளிட்டுத் தெலுங்கு, தமிழ், கன்னடம், இந்தி ஆகிய மொழிகளில் வெளிவந்து கொண்டிருந்த அச்செய்தி மடல், அவர்தம் பதவிக்காலத்தில் ஒரு பத்திரிகைக்குரிய இலக்கணங்களைக் கொண்டு பரிணமித்தது. தனக்கென ஒருபெயரினைக் கொண்டு விளங்காத பத்திரிகை அவர்தம் முயற்சியின் காரணமாக 1970-இல் 'ஸப்தகிரி' எனும் பெயர்பெற்று பத்திரிகை உலகில் நடைபயிலத்தொடங்கியது. பின்னர் 1972-ஆம் மற்றும் 1975-ஆம் ஆண்டுகளில் 'ஸப்தகிரி' தன் அளவுகளை மாற்றிக்கொண்டு, வாசகர்களின் நெடுநாளைய விண்ணப்பத்தினைப் பூர்த்திசெய்திடும் வகையில் திரு. கே. சுப்பாராவ் அவர்கள் தி.தி. தேவஸ்தான மேலாண்மை ஆதரவுடன், ஐந்து மொழிகளை ஒருங்கே கொண்டும், பின்னர் ஆங்கிலம் உள்ளிட்ட நான்கு மொழிகளில் வெளிவந்து கொண்டிருந்த 'ஸப்தகிரி'யினை, ஐந்து மொழிகளில் தனித்தனியாக வெளியிட்டு வாசகர்களின் பாராட்டுதல்கள் பெற்று, 'ஸப்தகிரி' அலுவலகம் வளர்வதற்கு வழிவகுத்தார். 1970 -இல் 'ஸப்தகிரி' பெயர்பெற்ற பிறகு அப்பத்திரிகை சுமார் 25 ஆண்டுகள் காலம் அவர்தம் பதவிக்காலத்தில், யாத்திரிகர்களின் வசதிகளையும், வாசகர்களின் எண்ணங்களையும் மனதிற்கொண்டு தம் 'ஆசிரியர் உரை' மூலம் பத்திரிகை ஒருபாலமாக அமைந்திடும் வகையில் இரயில், பேருந்து, தங்குவசதி போன்ற பல ஆக்கப்பூர்வமான முயற்சிகளுக்கு வித்திட்டார். நன்ருக வளர்ந்திட்ட தன் நிறுவனத்தின் பொறுப்பை ஒரு தந்தை தன் பிள்ளைகளிடம் ஒப்படைப்பது போல், 'ஸப்தகிரி'யின் எதிர்காலத்தை அந்தந்த மொழி துணையாசிரியர்களிடம் ஒப்படைத்து 30-6-95 அன்று தனது 'பத்திரிகையாசிரியர்' பணியிலிருந்து ஓய்வு பெற்றுர். ஓய்வு பெற்றும் தனது மரணத்திற்கு ஒரு மாதம் முன்புவரை பத்திரிகையின் வளர்ச்சியினையும் அதற்கு மேற்கொள்ளவேண்டிய ஆலோசனைகளைப் பற்றியும் பத்திரிகை ஆசிரியர் குழாமுடன் அவ்வப்போது தொடர்பு கொண்டது 'ஸப்தகிரி' மீது அவர் கொண்ட ஈடுபாட்டினை எடுத்துக்காட்டியது. அத்தகு சிறந்த ஒரு பத்திரிகையாசிரியரான திரு. கே. சுப்பாராவ் அவர்களை இழந்து வாடும் அவர்தம் குடும்பத்தினர்க்கு தி.தி. தேவஸ்தானம் தனது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொண்டு, அவர்தம் ஆத்மா சாந்தி அடைய அவ்ஏழுமலையான் திருவருள் புரிய அவனடியேயே தொழுகின்றோம்.

---ஆசிரியர்.

(தொடர் கட்டுரை)



# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

### மூலம் : 223

"ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது."

1) பெருமானைப் பற்றுதல் என்பது வீடுபேற்றிற்கு அவசியம் வேண்டுவதாயிருக்க, இதனை உபாயமன்று எனக்கழித்தல் எங்ஙனம்?

ஸ்வீகாரம் என்பதற்குப் பற்றுதல் என்பது பொருளாகும். துன்பம் நீங்கி இன்பம் பெறுதல் என்பது சேதனனுக்குப் பெருமானாலேயே நிகழ்கிறது. அவ்வாறே சேதனன் பெருமான் மீது கொள்ளும் பற்றும், பெருமானைப் பற்றுதலும் நிகழ்கிறது.

எனவே, பற்றுதலுக்கு உபாயத்தன்மை இல்லை என்பது தெளிவாகிறது. பற்றுதல் என்பது உபாயகாரியமே ஒழிய உபாயமன்று என்பது தெளிவு.

### மூலம் : 224

"ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்."

1) பற்றும பற்றுதலும் பெருமானாலேயே நிகழ்கிறது என்பது எங்ஙனம் பொருந்தும்?

பெருமான் யாவருக்கும் தலைவன். எனவே நித்ய முக்தர்களைப் போன்றே இவ்வுலக மக்களும் தன்னை அனுபவித்து இன்புற வேண்டுமென்று எண்ணுகிறான்.

இதனால் இவ்வுலகில் தோன்றும் உயிர்களுக்கு மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களோடுங் கூடிய சரீரத்தைப் படைக்கிறான். இந்தச் சரீரத்தின் மூலம் ஞானத்தை மலரும்படிச் செய்கிறான்.

மேலும், பெருமான் இப்பூவுலகில் இராமன், கிருஷ்ணன் எனப்படும் அவதாரங்களை எடுத்து உலக மக்களோடு குற்றமறக் கலந்து வாழ்கிறான்.

வேதம் முதலான சாத்திரங்களைப் படைத்து உலக மக்கள் பயன்பெறும் வகையில் தானே தன் அவதார காலங்களில் உபதேசித்தும், நடந்து காட்டியும் மக்களுக்குத் துணை செய்கிறான்.

இதனாலும், உலக மக்கள் தன்னை முழுவதுமாக அறிந்து கொள்ளாதிருத்தலைக் கண்டு பெருமான் மானைக் காட்டி மானைப் பிடிப்பாரைப் போன்று ஆழ்வார்களை அவதரிக்கச் செய்தான்.

பெருமான் தன்னுடைய சொரூப, ரூப, குண, விபூதிகளைத் தான் காட்டக் கண்டு ஆழ்வார்கள் அன்போடு அநுபவித்து வந்தனர். அவ்வனுபவங்களின் வெளிப்பாடே ஆழ்வார்களின் அருளிச்செயல்களாக மலர்ந்தன.

இவ்வாழ்வார்களின் பாசுரங்களில் பொதிந்து கிடக்கும்

பொருள் நுட்பங்களை ஆசார்யர்களைக் கொண்டு வெளியிட்டருளினான்.

இவ்வாறு பெருமான் அருளிய செயலின் பயனே பெருமான் மீது சேதனன் கொள்ளும் பற்றும், பெருமானைப் பற்றுதலும் நிகழ்தற்குக் காரணங்களாயின.

எனவே, பற்றும் பற்றுதல் பெருமானாலேயே நிகழ்கிறது என்பதனை நன்கு தெளியலாம்.

## மூலம் : 225

"அதுவும் அவனதின்னருளே!"

1) சேதனன் பகவானைப் பற்றுவது பகவானுடைய அருளாலேயே ஆகும் என்பதனை விளக்குக.

"உணர்வில் உம்பர் ஒருவனை
அவனதருளால் உறற்பொருட்டென்
உணர்வினுள்ளே இருத்தினன்
அதுவும் அவன தின்னருளே!"

என்பது ஆழ்வார் திருவாக்கு.

சேதனன் பெருமானை உபாயமாகப் பற்றுதல் என்பது பெருமான் அருளினாலும் சேதனன் செய்யும் முயற்சியாலுமே ஏற்படுகிறது என்று நன்கு உணரலாம். ஆதலின், சேதனன் இப்பற்றுதலில் உபாய புத்தியை அறவே ஒழித்தல் வேண்டும் என்பது தெளிவு.

## மூலம் : 226

"இத்தை ஒழியவும், தானே கார்யஞ் செய்யும் என்று நினைக்கக் கடவன்."

1) சேதனன் நினைக்க வேண்டியது யாது?

பெருமானைப் பற்றுதற்கும் அவனருளே வேண்டும் என்று அறிந்தோம். பெருமான் நமக்கு நன்மை செய்வது அவனைப் பற்றியதற்காகவன்று, அவனைப் பற்றாவிடினும், நம் ஆன்மா உய்வுபெற வேண்டும் என்பதில் கண்ணும் கருத்துமாயுள்ள பெருமானே நம்முடைய துன்பங்கள் நீங்கி இன்பங்கள் அடைதற்கேற்ற காரியங்களை நிச்சயமாகச் செய்வான்" என்று சேதனன் உறுதியாக நினைக்க வேண்டும்.

## மூலம் : 227

"அல்லாத போது உபாய நைரபேக்ஷ்யம் ஜீவியாது?"

1) இவ்வாறு நினைக்க வேண்டுவது ஏன்?

பெருமான் சேதனனுக்கு நன்மை செய்வதற்குச் சேதனுடைய பற்றுதலும் வேண்டும் என்று நினைத்தால், சிறு கைம்மாறையும் வேண்டாத பெருமானின் அபேட்சையற்ற தன்மை பெருமானுக்கு நிலைத்து நிற்காமல் போகும்.

எனவே, நாம் பெருமானைப் பற்றாவிடினும் பெருமான் நமக்கு நன்மையே செய்வான் என்று சேதனன் நினைக்க வேண்டும்.

## மூலம் : 228

"(1) இது ஸர்வ முக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தம்; (2) புத்தி ஸமாதாநார்த்தம்; (3) சைதந்ய கார்யம்; (4) ராகப்ராப்தம்; (5) ஸ்வரூபநிஷ்டம்; (6) அப்ரதிஷேதத்யோதகம்."

1) பெருமானைப் பற்றுதலால் சேதனனுக்கு ஏற்படும் பயன்கள் யாவை?

(1) "சேதனனிடம் ஒரு செயலும் இல்லாமல் இருக்கப்பெருமானே சிலரை உய்யச் செய்தால், பெருமான் ஏன் எல்லாரையும் முக்தராக்குதல் கூடாது?" என்னும் வினாவைத் தடுப்பதற்காகவே இப்பற்றுதல் இன்றியமையாது வேண்டப்படுகிறது.

(2) "நாம் இப்போது பெருமானைப் பற்றினோம். இனி நம் உய்விற்குக் குறைவில்லை" என்று சேதனன் மனச் சமாதானம் அடைதற்கு இப்பற்றுதல் காரணமாயுள்ளது.

(3) சேதனன் அறிவற்ற சடமாயிருக்காமல், அறிவுள்ளவனாய் இருப்பதால் பெருமானே உபாயம் என்கிற இந்த அத்யாவசியம் சேதனனுடைய அறிவின் செயலாயுள்ளது.

(4) பெருமானைப் பற்றுதல் என்பது. கன்ம ஞான பக்திகளைக் காட்டிலும் எளிதாயிருத்தலின் சேதனன் விரும்பத்தக்கதாயுள்ளது.

(5) இரட்சயப் பொருளாயிருக்கும் தன்மை பெருமான்

### பஞ்ச மஹா யக்ஞம்

| | |
|---|---|
| தேவயக்ஞம் | - ஹோமம், பூஜை |
| பித்ரு யக்ஞம் | - சிரார்த்தம், தர்ப்பணம் |
| பிரும்ப யக்ஞம் | - வேதம் ஓதுதல் |
| மனுஷ்ய யக்ஞம் | - அதிதி உபசாரம் |
| பூதயக்ஞம் | - காக்கை முதலியவற்றுக்கு அன்னமிடல் |

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

ஒருவனுக்கே சொரூபமாயுள்ளது. அச்சொரூபத்தில் நிற்பதற்காகவே பற்றுதல் தேவையாயுள்ளது.

(6) பெருமான் செய்து வந்த இரட்சணத்தை இதுகாறும் விலக்கி வந்த சேதனன், அது தவிர்ந்தமைக்கு இப்பற்றுதல் அறிகுறியாய் இருக்கிறது.

இவையே பெருமானைப் பற்றுதலால் சேதனனுக்கு ஏற்படும் பயன்களாம்.

## மூலம் : 229

"கீழ் தானும், பிறருமான நிலையைக் குலைத்தான், இங்குத் தானும் அவனுமான நிலையைக் குலைக்கிறான்."

1) *'மாம்' என்னும் பதத்துக்கு முன்னுள்ள 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்னுமிடத்தில் எல்லாத் தருமங்களையும் விடச்சொல்லுகிறார். எனவே, பலன்தானும், மற்றைய தருமங்களும் சேர்ந்திருக்கும் நிலையை அறவே ஒழித்தான்.*

'ஏகம்' என்னும் இப்பதத்திலோ உபாய பூதனான தானும், "நாம் பெருமானைப் பற்றினால்தான் பேறடையலாம்" என்று தன் பற்றுதலை உபாயமாகக் கருதி நிற்கும் சேதனனும் கலந்திருக்கும் நிலையை முற்றும் ஒழிக்கிறான். இவையே பெருமானின் செயல்களாம்.

இதனால் பெருமான் உபாயமாகும்போது வேறோர் உபாயமும் வேண்டுவதில்லை என்பதையும் அறியலாம்.

## மூலம் : 230

"அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம்"

1) *பெருமானைப் பற்றும் பற்று குற்றமுடையது என்பது யாங்ஙனம்?*

பெருமானைச் சேதனன் உபாயமாகப் பற்றும் பற்று, அகங்காரத்தைத் தன்னுள் கொண்டதாயும் குற்றமுடையதாயும் இருக்கும்.

"யாதொரு காரணத்தையும் கருதாமலே பெருமான் நமக்குத் தலைவனாக இருந்து கொண்டு நம்மைக் காத்து வருகிறான். அவ்வாறு நம்மைக் காக்கும் பெருமான் நம்மிடமுள்ள சொரூப ஞானத்தை மலரச் செய்து, அதன்மூலமாகத் தன் திருவடியைப் பற்றும்படிச் செய்கிறான்", என்று சேதனன் கருதாமல், "நாமே இப்பற்றுதலைச் செய்கிறோம்!" என்று நினைப்பது இவனுக்குக் குற்றமேயாம்.

இதனையே அகங்கார கர்ப்பம் என்கிறார் ஆசிரியர். இதனைத் தான் சாத்திரங்களும் 'கர்த்ருத்வாநு சந்தானம்' என்று சொல்கின்றன.

இனி 'அவத்யகரம்' என்றால் என்ன என்று பார்ப்போம். தன் மகனைத் தந்தையானவன் பச்சைப் பசுங்குழவிப் பருவத்திலிருந்தே பாதுகாத்து வருகிறான். வளர்ந்துவிட்ட நிலையில் மகனானவன் தந்தையைப் பார்த்து "நீ என்னைப் பாதுகாக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டால் அவ்விருவருக்குமுள்ள தொடர்பு குற்றமுடையதே!

அதுபோலவே இதுவரையும் பாதுகாத்து வரும் பெருமானை நோக்கி, "பெருமானே! என்னைக் காத்துக் கொள்வதற்காகவே உன்னைப் பற்றினேன். எனவே 'என்னைக் காத்தல் வேண்டும்' என்று பெருமானை வேண்டுதல் சேதனனுக்கும் பெருமானுக்கும் உள்ள தொடர்பில் குற்றமுடையதாகவே முடியும்.

(தொடரும்)

<u>தெரிந்து கொள்ளுங்கள்</u>

| | | |
|---|---|---|
| 1. | தூபத்தில் | - அக்னி தேவனையும் |
| 2. | மகா தீபத்தில் | - சிவனையும் |
| 3. | நாக தீபத்தில் | - கேதுவையும் |
| 4. | விருஷ தீபத்தில் | - தர்ம தேவதையையும் |
| 5. | புருஷாம்ருக தீபத்தில் | - விஷ்ணுவையும் |
| 6. | பூர்ண கும்பத்தில் | - ருத்திரனையும் |
| 7. | பஞ்ச தட்டுக்களில் | - பரம்பிரம்ம தேவதைகளையும் |
| 8. | நட்சத்திர தீபத்தில் | - 27 நட்சத்திரங்களையும் |
| 9. | மேரு தீபத்தில் | - 12 சூர்யர்களையும் |
| 10. | விபூதியில் | - பரமேஸ்வரனையும் |
| 11. | கண்ணாடியில் | - சூரியனையும் |
| 12. | குடையில் | - சந்திரனையும் |
| 13. | சாமரத்தில் | - மகாலட்சுமியையும் |
| 14. | விசிறியில் | - வாயுதேவதையையும் |
| 15. | ஆலவட்டத்தில் | - பிரும்மாவையும் |
| 16. | கற்பூரத்தில் | - அக்னியையும் |

அதிதேவதைகளாக பூஜிக்க வேண்டும்.
தீபமங்கள ஜோதி நமோ நம:
தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டம்

காடு வளர்ப்பு அவசியத்தை முன்னிட்டும் அரிய மரம், மூலிகை, கனிவகைகளை பயிரிடும் முக்கயத்துவத்தைக் கருத்திற்கொண்டும், குறிப்பாக திருமலையைச் சுற்றியும், மற்றும், திருப்பதி மலைச் சரிவுகளையும் சார்ந்த காட்டுப்பகுதியாக மாற்றி, ஓர் அழகான இயற்கை சூழ்ந்த தோற்றத்தை ஏற்படுத்திடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தின் வனத்துறை கடந்த பல ஆண்டுகளாக பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றது. இவ்வகையில் இம்முயற்சியினை மேலும் தீவிரமாக்கிடும் வகையிலும், இம்முயற்சியில் வேங்கடவன் பக்தர்களையும் பெருமளவில் பங்கேற்க செய்யவும், தி.தி. தேவஸ்தானம் கீழ்வரும் பல புதிய காடு வளர்ப்பு மேம்பாட்டுத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களை நாட்டிலுள்ள பக்தர்கள் ஓர் அரிய வாய்ப்பாகக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறூர்கள்.

### விருக்ஷ ஸம்வர்த்தனம்

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் ஒரு ஏக்கர் நிலம் 'மரம் வளர்ப்பு' நிலமாக மாற்றப்படும்.

**சலுகைகள் :**

இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இந் நிலம் அழைக்கப்படும்.

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்கள் தங்க, தங்கு வசதிகள் இலவசமாக அளிக்கப் படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்புநுழைவு தரிசன வசதி செய்து தரப்படும்.

நன்கொடை : ரூ. 15,000

### விருக்ஷ பிரஸாதம்

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் 100 பழ அல்லது மலர் விதைகள் விநியோகிக்கப்படும்.

**சலுகைகள் :**

* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் சாதாரண நாட்களின் போது இரண்டு நாட்களுக்கு இலவச தங்கு வசதி அளிக்கப்படும்.
* பத்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி அளிக் கப்படும்.

### ஸ்மாரக வனாலு

(நினைவு மரங்கள்)

இத்திட்டத்தின் கீழ் தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும்.

**சலுகைகள் :**

* நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.
* ஐந்தாண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டும் 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு வசதி மேற்கொள்ளப் படும்.

நன்கொடை : ரூ. 2000

### வன சம்ரக்ஷண பாகஸ்வாமயம்

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத் தப்படும்.

**சலுகைகள் :**

* இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக் கப்படும்.
* ஓர் ஆண்டின் போது, 5 நபர்களுக்கு சிறப்பு நுழைவு தரிசன வசதி மேற்கொள்ளப்படும்.

நன்கொடை : ரூ. 1000

### அத்யயன வனாலு

இத்திட்டத்தின் கீழ், தாவர இயல் பூங்காவில் ஒரு குறிப்பிட்ட செடியினம் நடப்பட்டு பராமரிக் கப்படும்.

**சலுகைகள் :**

* செடியருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 500

### விருக்ஷ தத்ததா

(மர தத்தெடுப்பு)

இத்திட்டத்தின் கீழ் திருமலை மலை வழிச்சாலை ஓரமாக மரம் நடப்பட்டு தத்து எடுத்துக்கொள் ளப்படும்.

**சலுகை :**

* மரத்தின் அருகே நன்கொடையாளரின் பெயர் காட்சியாக்கப்படும்.

நன்கொடை : ரூ. 250

ஏழுமலையான் நின்றருளும் இப்புனித மலைகளை பசுமையும், அழகும் மிளிர்ந்து விளங்கிட, மேற்படி திட்டங்களுக்கு தாராளமாக நன்கொடை அளிக்க முன் வருமாறு பக்தர்கள் கேட்டுக் கொள் ளப்படுகிறூர்கள்.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

# மங்கை மேக விடுதூது

நாதை நம்பி

வடக்கு மலையான் அடி தழுவி
வானை முட்டி மேகங்காள்
முடக்கொன் றின்றி நீவிரெலாம்
மூண்டு செல்வீர் யானுந்தான்
ஈடக்க அரிய தனிமையிலே
காலம் எல்லாம் கடந்தேக
ஒடுக்கப்பட்டே உழல்வேனோ
ஒருவன் அவன்பால் உரையீரோ!

கூதிர்க் கால வெண்பட்டே
கொடிய இரவில் குழைந்தேநான்
பாதி யாகிப் போயுள்ளேன்
பார்த்தே நீரும்போவீரோ!
நீதிக் குயிராய் நின்னுள்ளான்
நெடியோன் நிமலன் அவனிடத்தே
பேதித் துழலும் என்நிலையைப்
பேசி வந்து கூறிரோ!

வேண்டும் வண்ணம் திரிகின்ற
வெண்மை தவழும் மேகங்காள்
ஆண்டும் ஆண்டும் வருகினறீர்
அவனை அணைந்து பொலிகின்றீர்
ஈண்டு திருச்சா னூருள்ளே
எழுந்த கோயில் மதிலுள்ளோ
மூண்டு சூழும் உணர்வெல்லாம்
முடக்கி நாளும் மெலிகின்றேன்

கடமை கருணை என்றெல்லாம்
கண்டன கேட்டு வாழ்நாளில்
உடையான் அவனைக் கூடாமல்
ஊனைக் கூடி ஒழிவேனோ
திடமாய் ஏகும் மேகங்காள்!
திருவேங் கடத்தான் திருவடிககே
உடையாள் ஈங்கே உயிர்ஓட
உயிர்த்தாள் என்றே உணர்த்தீரோ!

ஆழ்வார் பலரும் புடைசூழ
அன்பர் தொடரந்து சங்கூத
சூழ்வார் தொழுவார் கூடிவர
சுத்தான் மாக்கள் பாடிவர
தாழ்வார் மகிழ்ந்தே கூத்தாட
தவழும் குழந்தை பார்த்தாட
வாழ்வார் கண்ட வழியானோன்
வாயால் ஒன்றும் மொழியானோ!

மலர்ச்சி தருதல் நீயன்றோ!
அலர்மே லவனை அளித்தோனே!
அடியார் துயரம் தவிர்த்தோனே!
பலரும் கூடும் பருவத்தே
பாவை என்னை மறந்தாயோ!

'கறிவேப் பில்லை' கதைசொல்லிக்
காலங் கடத்த வேண்டாங்காண்!
தறியில் ஓடும் ஊடெனவே
தமியாள் நெஞ்சம் ஆனதுகாண்!
உறியில் வெண்ணை உண்டோனே!
உன்னவள் உருகி உகுந்தேனே!
நெறிகள் உலகுக் களித்தோனே
நீயே தவறின் என்செய்வேன்!

யானே தலையாள் நடந்தங்கே
இராமா னுசனொடு வருவேன் காண்
'மானே யனையாள் துயராலே
மங்கை நிலையை மறநதான்காண்!'
'வானோர் வணங்கும் வேஙகடத்தான்
வள்ளல் தன்மை இதுவோகாண்?'
'ஏனோ?' உலகம் என்றுனனை
இழிக்கும் என்றே இருநதேன்காண்.

காலம் தாழ்த்திப் பின்வந்து
'காரிகை எங்கே?' என்றக்கால்
சீலம் பேணும் செல்விகளே!
சிறந்த என்றன் தோழிகளே!
'ஞாலம் எல்லாம் உண்டவனே!'
'நானும் மடிந்தேன்' என்னாதீர்
'மூலம எல்லாம் ஆனவனே!'
முடிந்து போனாள் என்னாதீர்

என்றே இவளும் இதயத்தே
எழுதி எழுதி ஏங்குகிறுள்
என்றே சொல்வீர் மேகங்காள்!
ஏகாந் தத்தே இருந்தருளும்
மன்றே சென்று முறையீடுவீர்
'மங்கை இவள்தான் வேண்டுமெனில்
இன்றே வருவீர்' எனச்சொல்லி
ஏற்றிக் கொண்டு வாரீரோ!
மலர்மேல் மங்கை என்றெல்லாம்
மக்கள் ஏதோ சொல்கின்றூர்
மலர்தான் உன்றன் மார்பன்றே

✪✪✪



# பிறவி வேண்டும் - பிறவி வேண்டாம்

திரு. D. கேசவ அய்யங்கார் - அல்லூர்.

தலைப்பைப் பார்க்கும் போதே, வாசக அன்பரகளுக்கு தலைப்பே ஒன்றுக்கொன்றுமு ரணாக உள்ளதே என்று குழபப மேற்படக் காரணமாகிறது. கட டுரையைப் படிததபிறகு, பிறவி வேண்டுமா, வேண்டாமா என பதை வாசகர்களே முடிவு செய்து கொளள வேண்டி யது. ஆழ்வாரகள், அடி யார்கள், அனுபூதி மகானக ளின் சரித்திரங்களைப் பார்த் தால, அவர்கள பிறவி எடுத்த பிறகு வாழ்ககையில் அவரவர் களுக்கு ஏற்பட்ட இன்ப துன் பங்களை நன்கு அனுபவிதது விட்டுத்தான், நன்கு உணர்நது கொணட பினபுதான, அவ ரவர்கள மனோ நிலையைப் பொறுத்து, பிறவி வேணடும் அலலது பிறவி வேண்டாம் என்ற முடிவுக்கு வந்து, தங கள் அனுபவஙகளை சாதாரண மானவர்களும் பின்பற்றி உய்ய வேணும் என்ற உயர்ந்த நோக் கத்தோடு மககளுக்கு நலலு ரைகளாகவும், உபதேசங்களாக வும் எடுத்துக் காட்டியுள்ளனர். பிறவி எனபது என்ன? அரிது அரிது மானிடராயப் பிறததல் அரிது எனறு ஔவை கூறியுள ளாள். நாட்டில் உளள மக்களை கவனிததால், சிலர் துன்பங் களை அனுபவித்துக கொண டிருக்கிறாரகள். சிலர் எல்லா வகையான வளங்களையும் வசதிகளையும் பெறறு மகிழ் வாக இருக்கிறாரகள். ஒருவன் துனபததை அனுபவித்துக் கொண்டிருக்கும் போது, பொது வாக மக்கள் துன்பப்படுகிறவ னைப் பார்த்து, என்ன தீச்செ யல்களை செய்தானோ, என்ன பாபம் செய்தானோ, இப்போது அனுபவிக்கிறான் என்கிறார்கள்.

எல்லா வசதிகளுடன் வளமாக வாழ்பவனைப் பார்த்து மக்கள் இவன் புண்ணியம் செய்துள் ளான், நற்காரியங்களைச் செய் துள்ளான் அதனால் வள மாக வாழ்கிறுன் என்று கூறிக் கொண்டிருப்பது இயற்கையா கும். இதிலிருந்து ஒருவனுக் குப் பிறவியானது அவனுடைய நறசெல்களையோ தீச்செயல்க ளையோ பொறுத்தே அமைகி றது என்பது நன்கு விளங் கும். இதன பொருட்டே, "வினை விதைத்தவன் வினை அறுப்பான், தினை விதைத்த வன் தினை அறுப்பான்" என்ற பழமொழியும் ஏற்பட்டி ருக்க வேணும் என்று ஊகித்துக் கொள்ளலாம்.

## பிறவியும், மரணமும் :

பொதுவாக உலகத்திலுள்ள எல்லா மதங்களைச் சார்ந்தவர களும பிறவி, முற்பிறவி, மறு பிறவையை எற்றுக்கொள்கின்ற னர். ஆனால் இந்து மதம் பாவம, புணணியம், பிறவி, மறுபிறவி, முற்பிறவி முதலிய வைகளை வலியுறுத்திச் சொல் லுகிறது. இறைவன் ஒருவ னைத் தவிர மற்ற மானிட, தாவர மிருகங்கள் முதலிய யாவும தோன்றி, அழிநது மறு படியும் உண்டாவதற்குத்தான் பிறவி (தோன்றுதல) என்று பெயர. ஆனால் இறைவன் ஒருவன் மட்டும் எடுக்கும் பிற விகளுக்கு "அவதாரம்" என்று பெயர் பெறும். அவதாரம் என்ற சொல்லுக்கே மேலேயி ருந்து கீழே இறங்கி வருதல் என்று பொருள். அதாவது சுர்வ சக்தனும், சர்வ ஜகத்ர க்ஷனுமான எம்பெருமான் தன் னுடைய மேலான நிலையை விட்டு சௌலப்ய, சௌசீல்யாதி குணங்களுக்கேற்ப மீனாய், ஆமையாய், வராஹமாய், நர சிம்மமாய் முதலிய பிராணிக ளாகவும் தவிர ராமகிருஷ்ணு திகள் போன்ற மானிடப் பிற வியையும், அந்தந்த காலங்க ளுக்கும், சந்தர்ப்ப சூழ்நிலை களுக்கும் ஏற்ப உருக்கொண்டு வருவதே அவதாரமாகும். இக்க ருத்தையே பகவான் கண்ணன் கீதையில் (அத.4 ஸ்லோகம் 5) கூறுகிறுர்.

பஹூனிமே வ்யதீதானி ஜன்மானி
தவ சார்ஜுன ।
தான்யஹம் வேத ஸர்வாணி ந
த்வம் வேத்த பரந்தப ॥

இதன் பொருளாவது: "எனக் கும், உனக்கும் அர்ஜுனா, பல பிறவிகள் எடுத்துக் கழிந்து போயின பரந்தாபா! அவற்றை எல்லாம் நான் அறிவேன. நீ அறியமாட்டாய." அசையாப் பொருள், தாவரங்கள், ஊரவன, பறப்பன, நீர் வாழ்வன, நடப் பன என்ற பல வகைகளி லும் பலப்பலப் பிறவி எடுத்து, அந்தந்தப் பிறவிகளில் செய்த நல்வினைக் காரணமாக வேறு பிறவியாக மானிடப் பிறவிக்குக் கிடைக்கிறது என்று கூறப் பட்டுள்ளது. ஏழாவது பிற விதான் தெய்வப்பிறவியாகும. இதிலிருந்து முக்யமாக நாம் தெரிந்து கொள்வது, மண்ணில் தோன்றியது ஒருநாள் அழிய வேண்டியதே என்பதாகும். இக் கருத்தையே நம்மாழ்வார் திரு வாய்மொழி 10ம் பத்து 9-ம் திருவாய்மொழி, பாசுரம் 7ல் "வைகுந்தம் புகுவது மண்ண வர் விதியே" என்று அருளிச் செய்துள்ளார்.

## மறுபிறவி :

ஒருவன் செய்யும் செயல் களே (வினைகள்) பிறப்புக்குக் காரணமாகின்றன. ஒருவ னின் பிறப்பு, அவன் செய்த செயல்களின் பயனை அனு பவிப்பதற்காகவே கிடைப்பது. பயனை அனுபவிப்பதற்கு ரிய வினை அல்லது செயல் கள் இல்லையென்ருல் பிறவியும் இல்லை. இன்று எடுத்துள்ள பிறவி முன் செய்த வினையின் பயனை அனுபவிப்பதற்கு என் ருல், முன் செய்த வினைகளை அனுபவிக்காது, எஞ்சியவற்றை யும் இன்று செய்து வரும் வினைகளின் பயனையும் அனு பவிப்பதற்கென்றே இன்னொரு பிறவி எடுக்க வேண்டியதா கிறது என்பதே விதியாகும். பிறவி மரணம் என்பன ஒரு தொடர் நிகழ்ச்சி என்று கூற லாம். நாம் இங்கு முக்யமாக கவனிக்க வேண்டியது "பிறப்பு, மரணம்" என்பதெல்லாம் சரீ ரததிற்கே ஒழிய ஆத்மாவுக் கில்லை என்பதாகும். இக்க ருத்தையே பகவான கண்ணன் கீதையில் அத்.2 ஸ்லோகம் 22 ல் கூறுகிறுர.

"வாசாம்ஸி ஜீர்ணுனி யதாவிஹாய
நவானிக்ருஹ்ணுதி நரோஅபராணி
ததா சரீராணி விஹாய
ஜீர்ணுன்யன்யானி ஸம்யாதி
நவானி தேஹீ॥

கிழிநதுபோன துணிகளை எறிந்துவிட்டு, மனிதன் புதிய துணிகளைப் போட்டுக்கொள் வது போலவே, ஆத்மாவா னது பழைய உடல்களை நீக் கிப் புதிய உடலில் புகுகி றது. சில புண்ணியசாலிகள் கூட தான்செய்த புண்ணியத் தின் பயனாக ஸ்வர்கம் சென் ருலும், புண்ணியம் குறைந்து போய் மறுபடியும் மண்ணுல கில் பிறக்கிருர்கள் என்கிருர் பகவான். (கீதை அத்.9 ஸ்லோ கம் 21)

தே தம் புக்தக்வா ஸ்வர்க்க லோகம்
வீசாலம் க்ஷீணே புண்யே
மர்த்தய லோகம் விசந்தி

## யாருக்கு மறுபிறவி இல்லை ?

பிறப்பு, இறப்பில்லாத ஒரு பெருவாழ்வு இருக்கிறது என்பதை நாம் அறிவோம். அதுதான் பேரின்பப் பெருவாழ்வாகும். இந்தப் பேரின்பப் பெரு வீட்டை அடைந்தவர்களுக்குப் பிறவி இல்லை என்று பகவான் கூறியுள்ளார். எந்த நற்செயலையும் பயனைக்கருதாமல் கருத்துணர்ந்து, எல்லாவற்றையும் இறைவனுக்கு அர்ப்பணமாக, சமதரிசனத்தோடு செய்து வந்தால், கர்மாக்கள் செய்தவனைச் சாராமல், தவிர இறைத் தொண்டாகவும், இறைவன் அடியார்கள் தொண்டாகவும் வினைகளைச் செய்து வந்தால் இறையருள் இவர்களை பேரின்பப் பெருவீட்டிற்கு அழைத்துச் செல்ல வழி அமைக்கும் என்று சான்றோர்கள் கூறியுள்ளனர். யார் ஒருவன் மரணத்தின் போது இந்திரியங்களை அடக்கி, தன் பிராணனை புருவ மத்தியிலிருந்து, தலை உச்சிக்கு கொண்டு சென்று "ஓம்" என்ற பிரணவத்தை உச்சரித்துக் கொண்டே மரிக்கிறானோ அவன் என்னையே அடைந்து, மறுபிறப்பை அடைவதில்லை என்கிறார் பகவான் கீதையில்.

ஆனால் ஸ்ரீவைஷ்ண சித்தாந்தத்தின்படி, யார் ஒருவன் தனது, தன்னுடையது என்று எதையும் எண்ணாமல், எல்லாவற்றையும் இறையர்ப்பணமாக செய்து, எல்லா தர்மங்களையும் விட்டு, பிராட்டி பூர்வமாகவும், ஆசார்யன் மூலமாகவும் பகவான் திருவடிகளையே சரணமாகப் பற்றி, சரணாகதி செய்கிறானோ அவனுடைய பாபங்களைப்போக்கி மேல் வீட்டையும் தருவதாக உறுதி அளிக்கப்படுகிறது. ஸர்வ சங்க பரித்யாகமும் சரணாகதியும் மேல் வீட்டை கொடுக்கும் என்பது உறுதி. ஸ்ரீப்ரபந்நனாகிய ஸ்ரீவைஷ்ணவனுக்கு மறுபிறவி கிடையாது என்று ஸ்ரீமத் வேதாந்த தேசிகன், தாம் அருளிச் செய்துள்ள "அதிகார சங்கிரகம் பாசுரம் 25ல்" கூறுகிறார்.

எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளை சரணமாக பற்றிய ப்ரபன்னர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நரகமோ, பிறவியோ கிடையாது என்பது தான் அப்பாடலின் தாத்பர்யம்.

இனி தெய்வப் புலவரான திருவள்ளுவர் யாருக்குப் பிறவியில்லை என்று கூறுகிறார் என்பதைச் சிறிது பார்ப்போம். திருக்குறள் அறத்துப் பால், துறவு அதிகாரம், 5ம் குறளில்,

"மற்றும் தொடர்ப்பாடு எவன் கொல்:
பிறப்பு அறுக்கல்
உற்றார்க்கு உடம்பு மிகை"

என்று கூறுகிறார். அதாவது பிறப்பைப் போக்கிக் கொள்ள உறுதி பூண்டவர்களுக்கு அவர்கள் தன் சரீரம் (உடலைப் பற்றி) தேவையில்லாதது என்று எண்ணி மற்ற பொருள்களோடு எப்படித் தொடர்பு கொள்வார் என்கிறார். தவிர மெய்யுணர்தல் அதிகாரம் முதல் குறளில்.

"பொருள் அல்லவற்றை பொருள்
என்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு"

என்று கூறுகிறார்.

அதாவது உண்மைப் பொருள் அல்லாத பொய்ப் பொருள்களை மெய்பொருள் என்று நம்பும் அறிவு மயக்கத்தால் துன்பமான பிறவி உண்டாகும். அதனால் திருவள்ளுவர் துறவற இயல், மெய் உணர்தல் அதிகாரத்தில் குறள் 6ல் கீழ்வருமாறு கூறியிருக்கிறார்.

"கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார்
தலைப்படுவர்
மற்று ஈண்டு வாரா நெறி"

சான்றோரிடம் கற்க வேண்டியவற்றைக் கற்று, உண்மைப பொருளைத் தாமும் ஆராய்ந்து கண்டு கொண்டவர்கள், மீண்டும் இவ்வுலகில் பிறவாத வழியை அடைவார்கள்.

மறுபிறவி என்னும் பொழுது சில நாட்களுக்கு முன் செய்தித் தாள்களில் வெளிவந்த ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருவதால் எழுதப்படுகிறது. வட நாட்டில் ஒரு குழந்தை பிறந்து, வளர்ந்து, பேசும் நிலைக்கு வந்தவுடன் அக்குழந்தை தான் முற்பிறப்பில் குறிப்பிட்ட ஊரில் பிறந்து இன்னாருக்கு வாழ்க்கைப் பட்டதையும், வீடுகள், தெருக்கள் முதலியனகூட எவ்வாறு கட்டப்பட்டிருந்தது என்பதையும் கூறிக்கொண்டே இருந்தது. பெற்றோரும் மற்றவர்களும் முதலில் இதனை நம்பாமல், திரும்பத் திரும்ப அக்குழந்தை, இதையே சொல்லி வந்ததினால், பெற்றோர்கள் தாங்கள் இருக்கும் இடத்திலிருந்து வெகு தூரத்தில், குறிப்பிட்ட ஊரில் சென்று விசாரிக்கும் போதுதான், குழந்தை கூறியது யாவும் உண்மையாக இருந்ததாக செய்தித்தாள்கள் பிரசுரம் செய்திருந்தன. முற்பிறவி எல்

லாம் உண்டு என்பதற்கு இது ஒரு சான்றாகும். இனி ஆழ்வார்களும் அடியார்களும் பிறப்பு, இறப்பு பற்றி எவ்வாறு கூறியுள்ளனர் என்று பார்ப்போம். திவ்ய ப்ரபந்த வரிசையில் முதலில் வருபவர் பெரியாழ்வாராகும். இவர் திருமொழி 5ம் பத்து 3ம் திருமொழி பாசுரம் 6ல், "சிவன், பிரம்மன், இந்திரன் முதலான எந்த தேவர்களும் இந்த பிறவியாகிய பெரு நோய்க்கு மருந்தினை அறிய மாட்டார்கள். ஸ்ரீமந்நாராயணன் ஒருவன் மட்டும்தான் இப்பிறவி நோய்க்கு மருந்தை அறிந்தவன்" என்று திருமாலிருஞ் சோலையிலுள்ள எம்பெருமானைப் பார்த்து தனக்குப் பிறவி இனி ஏற்படாதவாறு பார்த்துக் கொண்டு, அவன் சந்நிதியிலேயே வாழ்வதற்கு அருள் புரிய வேண்டும் என்கிறார். மேலும் இவ்வாழ்வார் முதுமையில் வியாதிகளால் பீடிக்கப்பட்டு, நினைவிழந்து, மரணத்தருவாயிலில் எம்பெருமானை நினைக்க முடியாமல் போய்விடும் என்பதினால் "அப்போதைக்கு இப்போதே சொல்லி வைததேன்" என்று முன்பதிவு செய்து கொள்கிறார். இரண்டாவதாக வருபவர் சூடிக்கொடுத்த நாச்சியாராகும். இவர் மற்றவர்களைப் போலில்லாமல், ஒரேயடியாக, "ஏழேழ் பிறவியிலும் தான் எம்பெருமானை விட்டு பிரியாமல், சரீர சம்பந்தமான உறவில்லாமல், ஆத்ம சம்பந்தமான உறவாலே அத்தனைப் பிறவிகளிலும் தான் அவனுக்கு வழுவிலா அடிமை செய்து கொண்டிருக்க வேணும்" என்கிறார்

ஆண்டாளுக்கு அடுத்தபடியாக வருபவர் குலசேகராழ்வார். இவர் ஒருவர் மட்டும் தனக்குப் பிறவி வேண்டும், அதுவும் திருமலையில் பிறக்க வேணும் என்று வேண்டுகிறார். இவர் அருளிச்செய்துள்ள, பெருமாள் திருமொழி 4ம் பத்தில், "திருவரங்கத்திலே பள்ளி கொண்டிருப்பவனே, திருவேங்கடமலையில் உள்ளான். தவிர, மனிதனாகப் பிறந்தவன், திருமலையில் சம்பந்தத்தைப் பெற வேணும்" என்கிறார். அதன் காரணமாகவேதான், அந்த திருமலையில் உள்ள ஏரியில் வாழும் நாரையாக பிறக்க மாட்டேனா, அங்குள்ள சுனையில் வாழும் மீனாகவோ, மலையில் அடர்ந்து வளர்ந்து இருக்கும் செண்பக மரமாகவோ பிறக்க மாட்டேனா என்று கூறுகிறார். எல்லாவற்றையும் கூறியும், இவ்வாழ்வாருக்கு மனநிறைவு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அதன் காரணமாக இவ்வாழ்வார் யோசித்துவிட்டுத் திருமலையில் ஏதேனும் ஒரு பொருளாகப் பிறக்கமாட்டேனா என்று கூறி முடிவு கட்டுகிறார். குலசேகரருக்கு அடுத்தபடியாக வருபவர் திருமழிசையார். இவரும் தனக்குப் பிறவி ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ள வேணும் என்று திருச்சந்த விருத்தம் பாசுரம் 46ல் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார். இவருக்கு அடுத்ததாகத் தொண்டரடிப்பொடியாழ்வார் இடம்பெறுகிறார். இவர் குலசேகரரைப் போல் பிறவி வேண்டும் என்னாமல், தனக்கு இனிப்பிறவியே வேண்டாம் என்று உறுதியாகக் கூறுகிறார். இவர் அருளிச் செய்துள்ள "திருமாலை" இரண்டாம் பாசுரத்தில், பவள வாயும், செந்தாமரை போன்ற கண்களையுடைய எம்பெருமானைப்பார்த்து, பரம பதத்தை ஆட்சி செய்யக்கூடிய பதவியைக் கொடுத்தாலும் வேண்டாம் என்று சொல்லி, மூன்றும் பாசுரத்தில் மனித வயது நூறு என்று சாஸ்த்திரங்கள் கூறினபோதிலும், உறக்கத்தில் பாதியும், குழந்தைப்பருவத்தில் கொஞ்சமும், மீதிக்காலங்கள் முதுமையிலும் நோய் வாய்ப்படுவதாலும், கழிவதால் தனக்குப் பிறவியே வேண்டாம் என்கிறார் தொண்டர் அடிப்பொடிகள். இங்கு ஆதி சங்கர பகவத் பாதாள் அருளிச் செய்துள்ள "பஜ கோவிந்தம்" என்கிற மோக முத்கரத்தில் கூறியுள்ள ஸ்லோகமான "பாலஸ் தாவத் க்ரீடா சக்த: தருணஸ் தாவத் தருணீ ஸக்த: விருத்தஸ் தாவத் சிந்தாஸக்த: பரே ப்ரும் மணி கோபி ந ஸக்த:" என்று கூறுவதை நினைவில் கொள்ள வேண்டியது. இவ்விதமே மற்ற ஆழ்வார்களும் தங்கள் அனுபவங்களை உணர்ந்து, பிறவி வேண்டாம் என்றுசொல்லியுள்ளனர். இனி அடியார்கள் இரண்டொருவர் பிறவியைப் பற்றி என்ன கூறியுள்ளனர் என்பதைப் பார்ப்போம். அடியார்களும், அனுபூதி மகான்களும், "பிறவி வேண்டாம், ஒருக்கால் பிறவி ஏற்படும்படி இருந்தால், இறைவன் திருவடிகளை மறக்கால், அவனுக்குத் தொண்டு செய்து உய்ய வேண்டும்" என்றுதான் வேண்டிக் கொண்டுள்ளனர். சுந்தர மூர்த்தி சுவாமிகள், திருப்பாண்டிக் கொடுமுடி என்னும் ஸ்தலத்தில் உள்ள இறைவனிடம் வேறு எதிலும் பற்று வைக்காமல், அவன் திருவடிகளையே சரணம் புகுந்தமையால், இப்பிறவியைப் பெற்றும், இனி பிறவாத வழியையும் கண்டு கொண்டதாகக் கூறுகிறார். சேக்கிழார் ஸ்வாமிகளும்

பெரிய புராணத்தில், இறவாத இன்ப அன்பு வேண்டும் என்று வேண்டி, "பிறவாமை வேண்டும், மீண்டும் பிறப்பு உண்டேல், உன்னை மறவாமை வேண்டும்" என்கிறார். அப்பர் பெருமானோ "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடியென் மனத்தே வழுவாதிருக்க வரம் தரவேண்டும்" என்று பாடியுள்ளார். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் தஞ்சையை அரசாண்ட சரபோஜி மன்னர் காலத்தில் வாழ்ந்த அனுபூதி மகானான ஸ்ரீஅபிராம பட்டரும், தான் அருளிச்செய்துள்ள, "அபிராமி அந்தாதி" யில் 25ம் பாட்டில் "மூவுலகுக்கும் மும்மூர்த்திகளுக்கும் தாயாக இருக்கும் அபிராமியே, அடியார்களின் துணைக் கொண்டு, அவர்களின் திருவடிகளைப் பற்றிக் கொண்டதினால், என் பிறப்பைப் போக்கிக் கொள்ள வழியையும் கண்டு கொண்டேன். தவிர உன்னை மறவால் போற்றும் பேறும் பெற்றேன்" என்கிறார். தவிர பாட்டு 51ல் "அபிராமியினுடைய திருவடிகளை சரணம், சரணம் என்று அவ்ள் திருவடிகளில் சரணகதி செய்தவர்களுக்கு, பிறப்பு, இறப்பு ஆகிய இரண்டையும் அடையாமல், பிறப்பு இறப்பற்ற பெருநிலையை அடைவார்கள்' என்கிறார். பின்னும் அபிராமிபட்டர், பாட்டு 72ல் "நான் இறைவனையே துதித்துக் கொண்டு இருக்கிறேன். அவ்வாறு துதித்துக்கொண்ட பின்னும், நான் மீணடும் பிறந்தால் அது எனது குறையாகாது" என்றும், "அக்குறை அபிராமியையே சாரும்" என்றும் சாடுகிறார்.

இவ்வாறு ஆழ்வார்களும், அடியார்களும், தங்கள் அனுபவ வாயிலாக, கிடைத்தற்கரியதான மானிடப் பிறவியை பெற்றதினால், அதைப் பெரிதாக நினைத்து, இனி பிறவாமல் இருக்கவும், ஒருக்கால் மறுபடியும் பிறக்க நேரிட்டாலும், இறைவனை மறவாமலிருந்து அவன் திருவடிகளை அடைய முயன்று அவ்வாறே அப்பேறும் பெற்றனர். எல்லா பிறவிகளைக் காட்டிலும், மானிடப் பிறவிதான் மிக உயர்ந்த பிறவியும், கிடைப்பதற்கரிய பிறவியுமாகும். ஏனெனில் இப்பிறவியில்தான் பேசமுடியும். நன்மை, தீமை என்று பாகுபடுததி அறியும பகுத்தறிவு பெற்ற பிறவியாகும். இப்பிறவியில்தான் மனிதன் பிறவி என்னும் பெருங்கடலை நீந்தி இறைவன் திருவடிகளை அடைய முடியும். பிறர்கு உதவி செய்வது, எல்லோரிடத்திலும் இனிமையாகவும், அன்பாகவும பேசுவது அஹிம்சையை கைக்கொள்வது, உண்மையே பேசுவது, இறைவனுக்கும் இறைவனடியார்களுக்கும் தொண்டு செய்வது முதலிய செய்கைகளினாலும் பிறவிக் கடனைவிட்டு இறைவன் திருவடிகளை அடையலாம் என்பதை நம் பூர்வாசார்யர்கள் கண்ட உண்மையாகும். இக்கருத்தையே திருவள்ளுவரும், "பிறவிப்பெருங்கடல் நீந்துவார் நீந்தார் இறைவனடி சேராதார்" என்று அருளியுள்ளார். எனவே நாமும் நமக்குக் கிடைத்துள்ள இம்மானிடப் பிறவியின் மூலம் மேலே கூறியபடி சேவைகள் செய்து, இப்பிறவியாகிய பெருங்கடலைத் தாண்டி இறைவன் திருவடிகளை அடைய முயல்வோமாக.



## பஞ்ச யக்ஞ ஹோமம்

| | | |
|---|---|---|
| கணபதி ஹோமம் | - | தடங்கலின்றி காரியங்கள் நடைபெற |
| சண்டி ஹோமம் | - | தாரித்ரியம், பயம் நீங்க |
| நவக்கிரகஹோமம் | - | கிரஹங்களைப் ப்ரீதி செய்ய |
| மஹா சுதர்சன ஹோமம் | - | பில்லி சூன்யம் நீங்க, வெற்றி கிட்ட |
| ருத்ர ஹோமம் | - | ஆயுள் விருத்திக்கும், க்ஷேமத்திற்கும் |

## பஞ்சோப சாரம்

| | | |
|---|---|---|
| சந்தனமிடுவது | - | பிருதுவிதத்துவம். |
| புஷ்பம் போட்டு அர்ச்சித்தல் | - | ஆகாய தத்துவம் |
| தூபம் காட்டுவது | - | வாயுதத்துவம். |
| தீபாரதனை காட்டுவது | - | அக்னி தத்துவம். |
| நைவேத்தியம் செய்வது | - | நீர்த் தத்துவம். |

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

## பகவானின் அவதாரங்களின் பெயர்களில் உள்ள நமது புராணங்கள்

1. ஸ்ரீ மத்ஸ புராணம்
2. ஸ்ரீ கூர்ம புராணம்
3. ஸ்ரீ வராக புராணம்
4. ஸ்ரீ நரசிம்ம புராணம்
5. ஸ்ரீ வாமன புராணம்
6. ஸ்ரீ கபில புராணம்
7. ஸ்ரீ பிரம்ம புராணம்
8. ஸ்ரீ கல்கி புராணம்

திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

# காலடி க்ஷேத்ரம்

வித்வான். வி. சுப்பிரமணியன் - உடுமலை.

நம் பாரத தேசத்தில் பல புண்ய க்ஷேத்ரங்கள் உண்டு. பகவான் அர்ச்சாவதாரமூர்த்தியாக எழுந்தருளிய தலங்களும் மஹான்கள் பலர் அவதரித்த புனிதமான ஊர்களும் இருக்கின்றன. அவைகளிலே ஒன்று கேரள தேசத்திலுள்ள காலடி க்ஷேத்தரமாகும். பௌத்த, ஜைன மதங்களால் வைதிக மதம் நலியத்தொடங்கியது. மறுபடியும் வைதிக மதத்தை நிலைநாட்ட ஸ்ரீசுப்ரமண்யர் குமரில பட்டராக அவதரித்தார். அவர் கர்ம காண்டத்தை மட்டும் ஸ்தாபித்தார். ஞான மார்க்கம் உன்னதநிலையடையாமலிருக்கக் கண்டு அதனைப் போதிப்பதற்கு இந்தக் கலியுகத்தில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஸ்ரீபரமேஸ்வரன் கேரள தேசத்தில் காலடி என்னுமூரில் வைதீக குலத்தில் அவதரித்தார்.

ஸ்ரீபரமேஸ்வரன் கேரள தேசத்தில் விருஷாபாசலம் என்ற ஊரில்தான் சுயம்புலிங்கமாக ஆவிர்ப்பவித்தார். அதனால் அந்த பிரதேசம் பரிசுத்தமானது. அந்நாட்டு அரசனான ராஜசேகரமனனனுக்குச் சொப்பனத்தில் தரிசனம் கொடுத்தார். அதனால் அவன் அந்த இடத்திலேயே கோவிலைக் கட்டினான். அந்த விருஷாபாசலம் தமிழில் திருச்சிவப்பேரூர் என்றாகி இப்போது திருச்சூர் என்று சொல்லபபடுகிறது. ரிஷபாசலேஸ்வரர என்ற தொடரை இடபக்குன்றுநாதர் எனக் கூறினர். பின்னர் பேச்சு வழக்கில் இடவக்குனறுநாகர் என்றாகி வடக்குநாதர், வட்டநாதர் என்றாகியது. அந்தப் பிரதேசத்தில் விளங்கும் சூர்ணிப்புழை என்று வழங்கும் பூர்ணாநதியின் கரையில் அமைந்ததே காலடி எனும் க்ஷேத்ர மாகும்.

அவ்வூரில் வைதிக மார்க்கத்திலிருந்து தவறாமல் ஆசார ஒழுக்கங்கள் உடையவரும் ஸர்வ வித்யா பாரங்கதருமாயிருந்த வித்யாதிராஜர் என்ற நம்பூத்ரி பிராம்மணரின் புத்திரர் சிவ குரு என்பவர். அவருடைய தர்ம பத்தினி ஆர்யாம்பாள். இந்தத் தம்பதியினரே தாம் அவதரிப்பதற்கு ஏற்றவராவார் எனக் கருதிய ஸ்ரீபரமேஸ்வரன் அவர்களையே தாய்தந்தையராகக் கொண்டு அவதரித்தார் ஸ்ரீசங்கரர்.



ததோ மகேஸ: கிலகேரலேஷு
ஸ்ரீமதவஷாத்ரௌ கருணாஸமுத்ர:
பூர்ணாநதி புண்யதடே ஸ்வயம்பு
லிங்காத்மநாநங்க காவிராஸீத்: ।
தச்சோதித: கஸ்சநராஜசேகர:
ஸ்வப்நே
முகூர்த்ருஷ்ட ததியவைபவ: ।
கஸ்சித்ததப்யா ஸக்தோ அக்ரஹார:
காலட்யபிக்யோஸ்திமஹாந்
மநோஜ்ஞ: ।
கஸ்சித்விபிஸ்சிதிஹ நிஸ்சல
தீர்விராஜே
வித்யாதிராஜா இதிவிஸ்ருத
நாமதேய: ।
ருத்ரௌ வ்ருஷாத்ரி நிலயோவதரீது
காமோயத்
புத்ரமாத்மபிதரஸமரோசயத்ஸ: ॥

சிவகுருவின் பத்தினியான ஆர்யாம்பாள் பர்த்தாவுக்கு ஏற்ற பதிவ்ரதையாயிருந்து பணிவிடை செய்து வந்தாள். அவர்களுக்கு எல்லா ஸம்பத்துக்கள் இருந்தும் புத்ர ஸந்தானம் இல்லை. அதனால் அவர்கள் விருஷபாத்ரிநாதரைப் பூஜித்து வந்தார்கள். கைலாஸபதியான ஸ்ரீபரமேஸ்வரன் சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால் வைகாசி மாதத்தில் சுக்ல பக்ஷ பஞ்சமிதிதியில் அவதரித்தார். ஸ்ரீமத் ஆதிசங்கரர் பரமேஸ்வரர் அவதாரமாயிருப்பதுடன் ஞானமார்க்கத்தை ஏற்படுத்தவே அவதாரம் செய்ததால் தக்ஷிணாமூர்த்தியின் அவதாரமாகவும் கருதுவர்.

அக்ஞானாந்தர் கஹனபதிதான் ஆத்ம
வித்யோப தேசைஸ்த்ராதும்
லோகான் பவதவ ஷிகாதாப
பாபஸ்யமானாந்
முக்த்காமௌநம் வடவிடபிநோ

*மூலதோநிஷ்பதந்தி*
*ஸம்போர் மூர்த்திஸ்ம்சரதிபுவனே*
*ஸங்கராசார்ய ரூபா*

இதனை அனுசரித்தே காலடியில் ஸ்ரீமத் ஆசார்ய மூர்த்தி தக்ஷிண முகமாகவே பூர்ண நதிக்கு அபிமுகமாக பிரிதிஷ்டை செய்யப்பட்டுள்ளார். காலடியில் பகவான் ஸ்ரீசங்கர பகவத்பாதருபமாக அவதரித்துத் தன் பாததூளிகையால் அந்த பரிசுத்தமான பிரதேசத்தை மேலும் பவித்திரமாகச் செய்தார். தன்னுடைய பால லீலைகளால் பெற்றோர்களையும் கிராமவாசிகளையும் மிகவும் சந்தோஷப்படுத்தி வந்தார்.

ஒருநாள் அவர் அம்பிகையின் கோவிலுக்குத் தாயாரின் கட்டளைப்படி நிவேதனம் செய்யச் சென்றார். பால் நிவேதனம் செய்தார். இவர் அமுது வேண்ட அம்பாள் பாலை முற்றிலும் அருந்தினார். பிறகு அவர் தனக்கில்லையென்று அழ, அம்பாள் தோன்றிப் பாலூட்ட ஞானம் கைவரப்பெற்றார். இந்த அற்புதத்தை அவர் அருளிய ஸௌந்தர்ய லஹரியில்,

*தவஸ்தந்யம் மந்யே தரணிதர*
*கந்யே ஹ்ருதயத:*
*பய: பாரவார: பரிவஹதி*
*ஸாரஸ்வத இவ ।*
*தயாவத்யா தத்தம் த்ரவிடஸிஸு*
*ராஸ்வாத்யதவயத்*
*கவீநாம் ப்ரௌடநாமஜநி*
*கமநீய: கவயிதா ॥*

அம்பிகையின் ஸ்தன்ய பானத்தினால் த்ரவிட சிசு பெரிய கவியாக ஆனதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'திரவிடசிசு'-திராவிடக் குழந்தை. திராவிடதேசம் தென்னிந்தியா. திராவிடம் என்பதற்குப்பழமை என்பது பொருள். திராவிட தேச மக்கள் திராவிடர் எனப்பட்டனர். பழங்குடி மக்களாகிய திராவிடர்கள் அறிவிற் சிறந்து தெய்வத்தன்மையுடையவராய் எல்லோராலும் போற்றத்தக்கவராய் வாழ்ந்ததனால் ஆரியர் எனப்பட்டனர். திராவிடரே ஆரியர்கள். திராவிடர், ஆரியர் வெவ்வேறானவர் அல்லர். திராவிடர்களில் சிலர் வேதங்களைக் கற்றுத் தேர்ந்தனர். அவர்கள் பிராம்மணர் எனப்பட்டனர். தென்னிந்தியாவில் தமிழ், மலையாளம், ஆந்திரம், கன்னடம், மஹாராஷ்ட்ரம் முதலிய பகுதிகளில் வாழ்ந்த,வாழ்கின்ற பிராம்மணர்கள் பஞ்சத்திராவிடப் பிராம்மணர்கள் எனப்படுவர். அதனாலேதான் பிராம்மண குடும்பத்தில் பிறந்த ஆதிசங்கர் 'த்ரவிடசிசு' என்று கூறப்பட்டார். திராவிட சிசுவாகிய மற்றொருவர் ஞானசம்பந்தர். அவரை இங்கே குறிக்கவில்லையென்று வியாக்கியான கர்த்தாக்கள் கூறியுள்ளனர். ஆசார்யாள் அவர்களின் மூன்றுவது வயதில் தந்தையார் சிவலோகபதவியை அடைந்தார். ஐந்தாவது வயதில் சங்கரர்க்கு உபநயனம் செய்தார்கள். ஸ்ரீசங்கரர் எட்டாவது வயது வரையில் காலடியில் இருந்தார். பிறகு அவர் தாம் வந்த காரியத்தை நிறைவேற்றக்கருதி சந்யாசத்தை மேற்கொண்டு ஞான மார்க்கத்தையும் அத்வைத மதத்தையும் ஸ்தாபனம் பண்ணி பாரத தேசம் முழுவதையும் தம் காலடியால் நடந்து நான்கு சிஷ்யர்களைக் கொண்டு நான்கு மாடங்களை ஸ்தாபனம் செய்தருளியதும், தாமே காஞ்சிபுரம் வந்து காமாக்ஷி அம்மனின் உக்ரத்தை அடக்கி, தாமே அங்கொரு மடத்தை ஸ்தாபனம் செய்தருளியதும் உலகறிந்த விஷயம்.

ஆசார்யாள் தம் தாயாரின் பொருட்டு பூர்ணநதியைத் தம் இல்லத்தருகில் வரவழைத்தார். விருஷபாசலேஸ்வரரை சுயம்பு மூர்த்தியாக எழுந்தருளச் செய்தும் காலடியை மேலும் புனிதமாக்கியுள்ளார். இத்தகைய புண்ணிய க்ஷேத்ரமான காலடி காலப்போக்கில் அழிந்து போயிற்று. 1930ம் ஆண்டிற்குப் பிறகு ஸ்ரீசங்கராசார்யாளின் சிஷ்ய பரம்பரையில் சிருங்கேரியில் எழுந்தருளியிருந்த ஜகத்குரு ஸ்ரீநரசிம்மபாரதி ஸ்வாமிகள் அவர்கள் அங்கு நேரில் விஜயம் செய்து காலடி க்ஷேத்ரத்தை மீண்டும் நிர்மாணித்து ஸ்ரீசங்கர பகவத்பாதருக்கும் ஸ்ரீசாரதாம்பாளுக்கும் ஆலயம் நிர்மாணம் செய்து அவ்வூரின் சாபவிமோசனத்தைப் போக்கி காலடி ஊரை உண்டாக்கினார். அது முதற்கொண்டு காலடி க்ஷேத்ரம் புத்துயிர் பெற்று விளங்கிவருகிறது. ஸ்ரீசந்த்ரசேகர பாரதி சுவாமிகள் அங்கு வேத பாடசாலை, வேதாந்த பாடசாலை முதலியவற்றை ஆரம்பித்து வைத்துள்ளார்கள். அங்கு மீண்டும் அக்ரஹாரம் தோன்றியுள்ளது. காலடி க்ஷேத்ரம் முன்பு போலவே சிறப்பாக விளங்கி வருகிறது.

காலடி க்ஷேத்திரத்தின் புகழை, பெருமையை உலகிற்குக் கண் முன்னால் எடுத்துக் காட்டுவதுபோல ஸ்ரீகாஞ்சிகாமகோடி பீட ஆச்சார்யாள் கட்டியுள்ள வானளாவிய ஸ்தூபி காலடி க்ஷேத்திரத்திற்குச் சூட்டப்

பட்டுள்ள கிரீடம் போல் விளங்குகிறது. கலங்கரை விளக்குப் போலவும் நின்று நிலவுகிறது. காலடியில் தோன்றிய ஆசார்யாளை மக்கள்,

காலடியில் அவதரித்த கருணைப்
பெருங்கடலே உந்தன்
காலடியே தஞ்சமென்று காலங்-
கழிக்கலானோம்
காலபயம் தீர்த்து அகாலபயம் தீர்த்து
கடுகியே வந்து எந்தன்
கால்ஓயுமுன்பே உந்தன் காலடி
சேர்ப்பிப்பாயே
காலடி வாழ்சற்குருவே

என்று போற்றித் துதிக்கின்றனர். அவர் அவதரித்த அந்தக் காலடி க்ஷேத்ரமானது இப்பூமியின் அணிகலனாக விளங்குகிறது. துக்க நிவாரணந்தந்து பிறவிப் பிணியைப் போக்க வல்லது. கருணையுள்ள பூர்ணு நதியால் சிறப்புடையது. ஆதி சங்கரரின் திருவடிகள் நம்மைக் காப்பாற்றட்டும்.

ஸ்ரீகாலடி தரணிபூஷண பூதஜந்மந்
ஜன்மாதி து:க விநிவாரண பக்ததீக்ஷ।
காருண்ய பூர்ண நயநாவநி
தேவபாக்ய
ஸ்ரீசங்கரார்ய மமதேஹி
பதாவலம்பம் ।।

என்று காலடியின் க்ஷேத்ர மகிமை கூறப்பட்டுள்ளது.



தெரிந்து கொள்ளுங்கள்

## தூபதீபங்களின் அதிதேவதைகள்

1. தூபத்தில் - அக்னி தேவனையும்
2. மகா தீபத்தில் - சிவனையும்
3. நாக தீபத்தில் - கேதுவையும்
4. விருஷ தீபத்தில் - தர்ம தேவதையையும்
5. புருஷாம்ருக தீபத்தில் - விஷ்ணுவையும்
6. பூர்ண கும்பத்தில் - ருத்திரனையும்
7. பஞ்ச தட்டுக்களில் - பரம்பிரம்ம தேவதைகளையும்
8. நட்சத்திர தீபத்தில் - 27 நட்சத்திரங்களையும்
9. மேரு தீபத்தில் - 12 சூர்யர்களையும்
10. விபூதியில் - பரமேஸ்வரனையும்
11. கண்ணுடியில் - சூரியனையும்
12. குடையில் - சந்திரனையும்
13. சாமரத்தில் - மகாலட்சுமியையும்
14. விசிறியில் - வாயுதேவதையையும்
15. ஆலவட்டத்தில் - பிரும்மாவையும்
16. கற்பூரத்தில் - அக்னியையும்

அதிதேவதைகளாக பூஜிக்க வேண்டும்.
தீபமங்கள ஜோதி நமோ நம:

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.



## 14 மனுவந்தரங்களும் பகவான் அவதாரமும்

| மனுவின் பெயர் | அவதாரம் |
|---|---|
| 1. சுயம்பு | - கபிலர், யாக்ஞர் |
| 2. சுவரோஷிஸன் | - ரிபு |
| 3. உத்தமன் | - சத்யசேனன் |
| 4. தாபசன் | - ஸ்ரீஹரி |
| 5. ரைவதன் | - விகுண்டர் |
| 6. சாட்சுசன் | - அகிதர் |
| 7. விவசுவான் (நாம் வாழும் இந்த மனுவந்தரத்திற்கு மனு | - த்ரிவிக்ரமர் என்ற வாமனர் |
| 8. சுவர்ணி | - சார்வபூமண் |
| 9. தக்ஷசாவர்ணி | - ரிஷபர் |
| 10. பிரம்மசாவர்ணி | - விஷபவத்சேனர் |
| 11. தர்ம சாவர்ணி | - தர்மகேது |
| 12. ருத்ர சாவர்ணி | - சுதர்மா |
| 13. ரவுச்சியன் | - யோகேஸ்வரர் |
| 14. பவுமன் | - ப்ரகத்பானு |

தகவல் : ஆர். ராஜலக்ஷ்மி - திருச்சி.



# ஆர்த்திப் பிரபந்த ஸாரம்

டாக்டர் ஸ்ரீஉ.வே. ஆத்தான் ரெங்காச்சாரியார்
ஆழ்வார்திருநகரி.

விசத வாக் சிகாமணியான ஸ்ரீமந் மணவாள மாமுனிகள் அருளிச்செய்த ஆர்த்திப் பிரபந்தம், மாறன் அடிபணிந்து உய்ந்தவரான சுவாமி இராமானுஜரது பெருமையைத் தெளிவாக விளக்கும். அறுபது கவிதைகளைக் கொண்ட இப்பிரபந்தம் படிப்பவர்களின் நெஞ்சை நீர்ப்பண்டமாக உருக்கிவிடும். இராமாநுஜர் கருணைக் கடல். "காரேய் கருணை இராமாநுஜா" என்பார் அமுதனார். எதிராஜர் திருவடியில் பரமபக்தி தலையெடுத்து, "பரமாபதமாபந்ந:" என்று சொல்லத் தகக பரமார்த்தியை அடைந்து, மாமுனிகள் அருளிய பாசுரங்களைக் கொண்டதால் "ஆர்த்திப பிரபந்தம்" என்று பெயர்பெற்றது. பிரபந்தத்தைத் தொடங்கும் பொழுதே "வாழி எதிராசன், வாழி எதிராசன்" என்று எம்பெருமானாரை மங்களாசாஸனம் (வாழ்த்துவதுடன்) செய்வதுடன், அவருக்குப் பல்லாண்டு பாடுகிறவர்களையும் வாழ்த்துவார்.

இதற்குப் பிள்ளைலோகம் ஜீயர் எழுதிய அவதாரிகை :-

"தம் ஆர்த்தியை எம்பெருமானாரிடம் விண்ணப்பிக்கத்தொடங்கிய இவர், தண்டகர்ரண்ய வாசிகளான ரிஷிகள் "ஏஹி பஸ்ய சரீராணி" என்று ராவணனாலும் மற்ற ராக்ஷஸர்களாலும் நலிவுபட்ட தம் தேகங்களைப் பெருமாளுக்குக் காட்டி ரக்ஷணம் பெறுவதற்கு முன்னம், அத்தலையில் இராமனது ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளில் ஈடுபட்டு "மங்களாநி ப்ரயுஞ்ஜாநா:" என்று மங்களாசாஸனம் பண்ணினாற்போலே இவரும் தம்மை விஷயீகரிக்க, விண்ணின் தலைநின்றும் எழுந்தருளின எம்பெருமானாருடைய, அப்ராக்ருத திவ்ய மங்கள விக்கிரகத்தில் பிரகாசிக்கும் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளைக் கண்டு கலங்கி ப்ரிக்ருதி தின்ற ஆத்மாவைக் காட்டி, தாம் விரும்பியதை அறிவிப்பதற்கு முன்னம் மங்களாசாஸனம் பண்ணுகிறுர். இந்த மங்களாசாஸனமும்,

"ஜயத்யதி பலோராம லக்ஷ்மணஸ்ச
மஹாபல,
ராஜா ஜயதி சுக்ரீவோ ராவணே
பிபாலித:"

என்றாற்போல சம்பந்த சம்பந்திகளாகவும் சென்றது என்பதாம்"

[முனிவர்கள் இராமன் அழகில் ஈடுபட்டு அவனுக்கும் அவ

# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages, Tirumala, the abode of Lord Venkateswara, has been a great centre of pilgrimage. Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being.

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind. TTD already manages a Leprosorium, centre for physically handicapped, a poor home and also a central hospital. To provide the most advanced medical technology to the needy, the TTD has launched another monument, a blessing from the Lord by opening Sri Venkateswara Institute of Medical Sciences -- a sophisticated super speciality centre on the lines of AIIMS of New Delhi & JIMPER of Pondicherry and PGI of Chandigarh Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences, which apart from offering service, training and education in medical sciences, also encourages Research and development.

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren.

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme To accomplish the goal of proving the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public

### The Scheme in essence:

A donor can make an endowment of Rs. 1000/- or multiples thereof / Rs. 1 lakh / Rs. 5 lakhs / Rs. 10 lakhs to T.T. Devasthanams which will in turn contribute matching grant The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy.

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs. 10 lakhs or above These endowment chairs are purely research oriented.

- Donations can be made by any individual / family / company / firms etc
- The name of the donor who endows Rs. 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital.
- The discharge ticket of the benefited patient will carry the name of the donor

### Additional Benefit and facilities :

- Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G)
- Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital
- Paid rooms can be named after donors who contribute a sum of Rs 5 lakhs or above.
- By paying Rs 5 lakhs and above, a donor may sponsor one operation per year
- Donors can sponsor feeding of the In-patients and out-patients They may also sponsor a travel fellowship for the faculty per year

All donations, by D Ds drawn in favour of The Executive Officer, T T Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars.

- Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs 1 lakh or more
- Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued

The donors are also welcome to offer equipment, vehicles etc to SVIMS or even sponsor health camps in rural areas, if they so desire Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# Sri Venkateswara Vanabhivriddhi Scheme

## An Appeal . . .

*He that planteth a tree is the servant of God*
*And Provideth a kindness for many generation*
*And faces that he, hath not seen shall bless him*

Sacred Forests of Tirumala are the precious gift of Lord Venkateswara to mankind. With a view to safeguarding its unique yet delicate ecological condition, Tirumala Tirupati Devasthanams have introduced a series of exciting schemes called **Sri Venkateswara Vanabhivriddhi Schemes.** The Schemes seek to provide a rare opportunity to the public for participation in a massive plantation project implemented by the Forest Department of T.T. Devasthanams.

The salient features of Sri Venkateswara Vanabhivriddhi Schemes are:

**VRIKSHA SAMVARDHANAM :** Under this Scheme, about one acre of land will be brought under plantation.

**Benefits :**

- Plantation will be named after the donor or person of his choice.
- Every year free accommodation on 2 ordinary days at Tirumala for 10 years.
- One paid special darshan every year for 5 persons for 10 years

**Donation :** Rs. 15,000.

**VRIKSHA PRASADAM :** The Scheme is proposed for raising 100 fruit and flowering seedling every year

**Benefits :**

- Distribution of one hundred seedlings, both fruit bearing and flowering in the donor's name every year.
- Two days free stay at Tirumala every year on any ordinary days for 10 years.
- One paid special darshan every year for five persons for 10 years.

**Donation :** Rs. 10,000.

**SMARAKA VANALU :** Under this scheme 10 saplings of selected species will be planted in a grove and maintained for five years.

**Benefits :**

- The grove will be named after the donor.
- Every year paid special darshan for five persons for five years.

**Donation :** Rs. 2,000.

**VANA SAMRAKSHANA BHAGA SWAMYAM :** is proposed to protect and improve the natural forest cover on Tirumala hills.

**Benefits :**

- Diplay of the donor's name.
- Paid special darshan for five persons for one year.

**Donation :** Rs. 1,000.

**ADHYAYANA VANALU :** Plantation and maintenance of a variety of species will be taken up under this scheme in the proposed botonical garden at Tirumala.

**Benefits :**

- Display of donor's name near the plant.

**Donation :** Rs. 500.

**VRIKSHA DATTATA :** is a bold scheme featuring adoption and plantation of avenue trees on the ghat road and at Tirumala.

**Benefits :**

- Display of donor's name.

**Donation :** Rs. 250.

We appeal to all devotees to donate liberally and help us to preserve the priceless forest wealth of Tirmala - The Abode of LORD VENKATESWARA.

Please send your donations by Demand draft to the **The Executive Officer, T. T. Devasthanams, TIRUPATI - 517 507.**

**EXECUTIVE OFFICER**

னுடனிருந்த லக்ஷ்மணன், சுக்ரீவன் ஆகியோருக்கும் மங்களாசாஸனம் பண்ணினார்.]

அதுபோல எம்பெருமானார் தம்மை ஏற்றுக்கொள்ள எதிரில் நிற்பது போன்ற எண்ணம். அவரிடம் இயற்கை துன்புறுத்தியுள்ள ஆத்மாவைக் காட்டி தாம் விரும்பியதைக் கூற நினைத்த மாமுனிகள், அவரது அழகிலும், குணங்களிலும் ஆழங்காற்பட்டு, அவரையும் அவருக்குப பல்லாண்டு பாடும் அணுக்கத் தொண்டர்களான ஸ்ரீவைஷ்ணவர்களையும் மங்களாசாஸனம் செய்கிறுர்.

"வாழி எதிராசன் வாழி
எதிராசன்
வாழி எதிராசனென வாழ்த்துவார்
வாழியென
வாழ்த்துவார் வாழியென
வாழ்த்துவார் தாளிணையில்
தாழ்த்துவார் விண்ணேர் தலை"

என்பது அவர் திருவாக்கு.

வைணவச் சிறப்புக்களையும், வேதாந்த ஸாரத்தையும், ஆசார்ய அபிமானத்தையும் இப்பிரபந்தத்தில் மாமுனிகள் தெளிவாகவும், அழகாகவும் விளக்குகிறுர். ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் 'சரம பர்வ நிஷ்டை' ஆசார்ய பக்தியாகும். அமுதனார் பிரபந்த காயத்ரியான இராமாநுச நூற்றந்தாதியில் தமது அத்யந்த ஆசார்ய பக்தியை மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். ஆர்த்திப் பிரபந்தமும், மாமுனிகளின் ஆசார்ய பக்தியை நன்ருக உணர்த்தும். தமது ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையிடம் அவர்கண்டு வணங்கிய திருக்கோலம் எதிராசன் வடிவேயாகும்.

"தாய், தந்தை, தாரம், சுற்றம். செல்வம் எல்லாம் எனக்கு நீயே எதிராஜா!" என்று ஓலமிட்டு, உடல் தளர்ந்த முதுமைப் பருவத்தில் அதை அறுத்தருளும்படி எதிராஜர் சரணங்களைப் பற்றுகிறுர்.

இந்த உடல் சிறைவிட்டு
எப்பொழுது யான்ஏகி
அந்தமில் பேரின்பத்துள்
ஆடுவேன்? அந்தோ!
இரங்காய்! எதிராசா! என்னை
இனி உய்க்கை

பரங்காண் உனக்கு
உணர்ந்து பார்!"

என்று எதிராசனையும் ஆணையிட்டழைப்பதில், இவரது ஆசார்ய பக்தி தெற்றெனப் புலப்படுவதுடன், அந்தரங்க உரிமையும் புலனாகும். ஒருக்கால் எதிராஜர் தமது பிரார்த்தனையை ஏற்காவிட்டால் என்ன செய்வது என்ற ஐயம் ஏற்பட, தமக்கு எதிராசரிடம் உள்ள உறவு முறையை நினைவூட்டுகிறுர் மாமுனிகள். ஆசார்யன், சிஷ்யன் ஆருயிரைப் பேணுவதால், அவனுக்குத் தாய் நிலையில் இருப்பவன். அதனால் எதிராசரான தாயிடம் மாமுனிகளும் "தாயே! உன் மகனான மணவாளன் கிணற்றில் விழுந்து விட்டானே! நீ அவனைக் காப்பாற்று" என்று கெஞ்சுகிறுர்.

"கூபத்தில் வீழும் குழவியுடன்
குதித்து அவ்
வாபத்தை நீக்கும் அந்த
அன்னைபோல்-பாபத்தால்
யான் பிறப்பனேலும் இனி
எந்தை எதிராசன்
தான் பிறக்கும் என்னை உய்ப்பதா"

என்கிறுர். பிறவித்தளையை அறுத்த எதிராசரிடம் தமக்காக மீண்டும் பிறக்க வேண்டு கிறுர். குலசேகராழ்வார் காட்டும் தாய் சேய் உறவுபோல் இதுவும் உள்ளது.

இராமாநுஜரின் பெருமைகளுக்கெல்லாம் காரணம் அவர் சுவாமி நம்மாழ்வாரின் திருவடிநிலையாகத் திகழ்வதே. நம்மாழ்வார் அணியரங்கன் திருவடிச் சுவடாக விளங்குகிறுர். ஆழ்வாரின் பாதுகையாக எதிராசர் திகழ்கிறுர். எதிராசரின் பாதுகையாகத் தாம் ஆட்பட்டிருப்பதே தமது ஆத்ம விடுதலைக்கு மேலான வழியாகும் என்று மாமுனிகள் உணர்ந்து,

"பூமகள் கோன் தென்னரங்கர்
பூங்கழற்குப் பாதுகமாய்
தாம் மகிழும் செல்வச் சடகோபர்
தேமலர்த்தாட்கு
ஏய்ந்தினிய பாதுகமாம் எந்தை
இராமாநுஜனை
வாய்ந்தினிது நெஞ்சமே வாழ்"

என்று பாடுவார்.

"எதிராசா! என்னை எப்படி எனது ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளை உன் திருவடிகளில் சேர்த்தாரோ அப்படியே நீயும் சடகோபர் திருவடி பலத்தால், தென்னரங்கன் திருவடித்தாமரைகளில் அடியேனை அடையுமாறு செய்ய வேண்டும்" என்று கதறுகிறுர் மாமுனிகள்.

ஆசார்ய பக்தியில் மாமுனிகள் தலைசிறந்து நிற்பதை இந்த நூலில் பலவிடங்களில் காணலாம். "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்றே நாவுரைக்கும் என்கிறுர். பவநோயைத்தாங்க முடியாமல், உள்ளம் முழுவதும் எதிராசமயமாகி, அவரைத் தவிர வேறு புகலிடமில்லை என்ற உணர்வு ஏற்படுகிறது.

"எனக்கு விடிவு காலம் என்று வரும் எதிராசா?" என்று மனமுருகிக் கேட்கிறார் மாமுனி. "அல்லும் பகலும், யான் யாக்கை வழி உழன்று செல்வது உன் பெருமைக்குக் குறையல்லவா!" என்றும் உடையவரிடம் கேட்கிறார்.

தென்னரங்கர் சிலருக்கு நேராக அருள் செய்து விடுவார். திருப்பாணாழ்வார் இத்தகைய அருள்பெற்றவர். அரங்கனை அணுகும் அதிகாரம் ஆசார சீல ரான அனுபூதிச் செல்வர்களுக்கே உண்டு. ஞானம் பக்தி வைராக்கியம் இல்லாத எளிய வருக்கும் எதிராசரின் அருள் இருந்தால் போதும். அரங்கன் பேருள் கிடைத்துவிடும். அதனால் 'எதிராசா! நீ எளியேனுக்கு இரங்குவாயாக' என்று கதறுகிறார் மாமுனிகள்.

ஆர்த்திப் பிரபந்தத்தில் மாமுனிகள் ஸ்ரீவைஷ்ணவன் பக்த நிலையை விட்டு முக்தாத்மாவாக மாறும் பொழுது மேற்கொள்ளும் புனிதமான பிரயாணத்தை அற்புதமாகச் சித்தரிக்கிறார். தமக்கு அருளப்போகும் அந்தப் புனிதப் பிரயாணம் பற்றி எண்ணி எண்ணி மனம் பூரிக்கிறார். இந்தப் புனிதப்பயணம் சாதாரணமாகக் கிடைத்துவிடாது. ஆசார்யரான எம்பெருமானார் பரம க்ருபையால் தான் கிடைக்கும் என்பார்.

"போம்வழியைத் தரும் என்னும்
இன்பமெல்லாம்
புசித்து வழிபோய் அமுதவிரசை
ஆற்றில்
நாம் மூழ்கி, மலமற்றுத் தெளி
விசும்பை
நண்ணி, நலந்திகழ் மேனி
தன்னைப் பெற்று
தாம் அமரர் வந்து எதிர்
கொண்டலங்கரித்துச்
சற்கரிப்ப, மாமணி மண்டபத்துச்
சென்று
மாமலரள் கோன் மடியில் வைத்து
கக்கும்
வாழ்வு நமக்கு எதிராசன்
அருளும் வாழ்வே!"

என்ற மாமுனிகள் பாசுரத்தை, சுவாமி நம்மாழ்வாரின் "சூழ்விசும்பணி முகில்...." என்ற பதிகத்துடன் ஒப்பிட்டுணரலாம்.

வந்தவர் எதிர்கொள்ள மாமணி மண்டபத்து அந்தமில் பேரின்பத்து அடியாரோடிருக்கும் வாய்ப்பு, ஆசாரியரின் அருளால் கிடைக்கிறது என்பதை மிகத் தெளிவாக விளக்குவார் மாமுனிகள்.

எதிராசரின் அருள் வெள்ளத்தில் தமது பாபங்கள் கரைந்து போம் என்று நம்புகிறார் மாமுனி. தென்னரங்கர், தேவியர், சேனை முதல்வர், மாறன், கலியன், நித்ய சூரிகள் இவர்களால் ஆகாததைக் கருணைக் கடலான எதிராசர் செய்து முடிப்பார் என்று வீறுடன் பாடுவார்.

"தென்னரங்கர் தமக்காமோ?
தேவியர்கட்காமோ?
சேனையர் கோன் முதலான
சூரியர்கட்காமோ?
மன்னிய சீர்மாறன் அருள் மாரி
தமக்காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள்
தங்களுக்கும் ஆமோ?
என்னுடைய பிழை பொறுக்க
யாவருக்கு முடியும்?
எதிராசா! உனக்கன்றியான்
ஒருவற்காகேன்
உன்னருளால் எனக்கு ருசி
தன்னையும் உண்டாக்கி
ஒளி விசம்பில் அடியேனை
ஒருப்படுத்து விரைந்தே"

என்று பாடிப் பரவி, ஆசார்யரான எதிராசரின் அருள் வெள்ளத்தில் திளைக்கிறார் மாமுனிகள்.

"ஸ்ரீமந் நாராயணனுக்கும் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பை உணர ஆசார்யன் அருளே துணை செய்யும் என்பதைக் கூசாமல் கூறு" என்று அறுதியிடுகிறார் மாமுனிகள்.

'ஆசார்ய அபிமானமே உத்தாரகம்' என்ற உறுதி கொண்ட மாமுனிகள், திருவாய்மொழிப் பிள்ளையின் சரண கமலங்களை எதிராசர் பாதுகையாகவே எண்ணி, உள்ளம் தேறி, ஆத்ம சமர்ப்பணம் செய்கிறார்.

ஸ்ரீவைஷ்ணவன் எப்படி இருப்பான் என்பதையும்,

"தென்னரங்கர் சீருக்கு இலக்காகப்
பெற்றோம்
.........பிறர் மினுக்கம் இல்லாப்
பெருமையும் பெற்றோமே"

என்ற பாசுரத்தில் அற்புதமாகக் காட்டுகிறார் மாமுனிகள். பிறர் வாழ்வின் உயர்வைக் கண்டு பொறாமை கொள்ளாமல், அரங்கன் தாள்பணிந்து, மாறன் கலை உணவை உண்டு, மதுரகவி வழிநடந்து வாழவேண்டும் - அதுவே சிறந்த வாழ்வு என்கிறார்.

மாமுனிகளின் ஆர்த்திப் பிரபந்தம் ஸ்ரீவைஷ்ணவ உலகிற்கு வழிகாட்டும் ஒளி விளக்கு. அனுஸந்திப்போம் ஆசார்ய அனுக்கிரஹம் பெறுவோம்.

எம்பெருமான் திருவடிகளே சரணம்!

மாமுனிகள் திருவடிகளே சரணம்!



# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

T.S. ராஜகோபாலன்

### 11. இவனது அருள்

**101.** அச்யுத: - தனது அன்பர்களை விட்டு விலகாதவன்.

அச்சுதன் அமலன் என்கோ (3-4-5)

**102.** வ்ருஷாகபி: - தர்ம வராஹ ஸ்வ ரூபன்.

கோல வராக மொன்றாய் (10-10-7)

**103.** அமேயாத்மா - அன்பர்களுக்கு அருள் செய்வதில் அளவிடமுடியாதவன்.

கடல் புரையுஞ் சீலப் - பெருஞ்சோதிக்கு என் நெஞ்சு ஆட்பட்டு (பெரி.திரு.4)

**104.** ஸர்வயோக - விநிஸ்ருத: - (எப்படி எனில்) எல்லா வகை உபாயங்களாலும் எளிதில் பெறக் கூடியவன்.



எளிவரும் இயல்பினன் (1-3-3)

[எளிவரும்-எளிதில் பெறக்கூடிய.]

வஸுர் வஸுமநா:
ஸத்ய: ஸமாத்மா ஸம்மித: ஸம: ।
அமோக: புண்டரீ புண்டரீகாக்ஷோ
வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி: ।। 12 ।।

**105.** வஸு: - அன்பர் தனக்கு நிதிபோல் கருதி, இவர்களிடம் பேரன்பு கொள்வோன்.

அடியான் இவன் என்று, எனக்கு ஆரருள் செய்யும், நெடியானை.......(9-4-10)

**106.** வஸுமநா: - அன்பர் தனக்கு நிதி போல் மனங்கொள்பவன்.

அந்தாமத்து, அன்பு செய்து, என் ஆவிசேர் அம்மானுக்கு (2-5-1)
[அம் தாமம் - பரமபதம்.]

**107.** ஸத்ய :- அன்பர்களது விருப்பங்களை நிறைவேற்றுகிறவன்.

தண்டாமஞ் செய்து - என்
எண்டான் ஆனானே (1-8-7)

[தண்தாமம்-பரமபதம். செய்து-இதில் கொள்ளும் விருப்பத்தை என்னிடம் செய்து. எண்தான் ஆனான்-நான் நினைத்தவாறு என் கை புகுந்தான்.]

**108.** ஸமாத்மா:- தன்னைப் பற்றியவர்களது குணங்களை ஆராயாமல் சமமாகப் பழகுவோன்.

பரிவதில் ஈசனைப் பாடி (1-6-1)

[பரிவு அது இல்-பக்ஷபாதம் என்பது இல்லாமல்]

**109.** ஸம்மித: (இவனது) குணங்களை அறிந்த பக்தர்களால் புகழப்படுவோன்.

பிணங்கி அமரர் பிதற்றும்
குணங்கெடு கொள்கையினானே (1-6-4)

[பிணங்கி-துதிக்கும் போது தாம் தாம் முன்னதாகத் துதிக்கும், கொள்கை-இயல்பு, தாம் தாம் அறிந்த குணத்தையே பெரிதும் பாராட்டி, இதுவே இதுவே என்று சொல்லும் இயல்புடையோர் நித்யசூரிகள்.]

**110.** ஸம: பழைய அன்பர், புதிதாகப் பெற்ற அன்பர் என்று பாராமல் சமமாகப் பழகுபவன்.

தனது அன்பர்க்கு அன்பாகுமே (9-10-5)

**111.** அமோக: இந்த அன்பு குறையாமல், வீணாகாதவாறு விளங்குவோன்.

அன்பே-பெருகும் மிக இது என் பேசீர் (பெ.திரு.8)

[உமக்கு என்னிடம் அன்பே மிகுந்து வளர்கின்றது; காரணம் என்ன என்று பேசுவீர்.]

**112.** புண்டரீகாக்ஷ: புண்டரீகம் எனப் பெறும் ஸ்ரீவைகுண்ட வாஸிகளுக்குக் கண் போன்றவன்.

கண்ணாவான் மண்ணோர் விண்ணோர்க்கு (1-8-3)
அல்லிக் கமலக் கண்ணனை (8-10-11)

**113.** வ்ருஷகர்மா: இதற்குக் காரணம், தர்மமான செயல்களே செய்பவன்,

அறமுயல் ஆழியங்கை அம்மான் (5-1-6)

[அறம் முயல் அம்மான்; ஆழி-சக்கரம்]

**114.** வ்ருஷாக்ருதி: தர்மமே வடிவானவன், அமுதம் போல் குளிர்ந்த திவ்ய ரூபம் உள்ளவன்.

அறவனை ஆழிப் படை அந்தணனை (1-7-1)

[அறவன் - தர்மமே இயல்பானவன்]

ருத்ரோ பஹுசிரா பப்ரு:
விச்வயோநி: சுசிச்ரவா: ||
அம்ருத: சாச்வதஸ்த் தாணு:
வராரோஹோ மஹாதபா: || 13 ||

**115.** ருத்ர: தனது வடிவாலும், கல்யாண குணங்களாலும், செயல்களாலும் பக்தர்களது மனத்தைக் கவர்ந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கச் செய்வோன்.

....பரஞ்சுடரை நினைந்தாடி, நீர்மல்கு
கண்ணினராகி நெஞ்சம் குழைந்தாடி (3-5-7)

**116.** பஹுசிரா: - அனந்தன் வடிவாக விளங்குவதால் பணங்கள் பல வாய்ந்தவன்; சிரங்கள் பல வாய்ந்தவன்.

......அனந்தனை, அனந்தன்றன்மேல்
நண்ணி நன்கு உறைகின்றானை (3-4-9)
முடிகள் ஆயிரத்தாய் (3-1-10)

**117.** பப்ரு: இந்தப் பெரிய வடிவுடன் பூமியைத் தாங்குவோன், காப்பவன்.

உயிரினால் குறைவு இல்லா உலகு ஏழ்
தன்னுள் ஒடுக்கி (4-8-11)

[வீடு-மோக்ஷம். பெறுத்தி-பெறச்செய்து]

**118.** விச்வயோநி: அன்பர் யாவரையும் தன்னிடம் சேர்த்துக்கொள்ளக் காரணமாக இருப்பவன்.

வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்கும் தரும்
ஒரு நாயகமே (4-8-11)

[வீடு - மோக்ஷம், பெறுத்தி-பெறச் செய்து.]

**119.** சுசிச்ரவா: அன்பர்களது இனிய சொற்களைச் செவிமடுத்துக் கேட்பவன்.

பரவி வானவர் ஏத்த நின்ற பரமனைப்
பரஞ்சோதியை (3-6-3)
செவிக்கு இனிய செஞ்சொல் (10-6-11)

**120.** அம்ருத: இவர்களுக்கு அளவற்ற இன்பம் தருவதால், அமுதம் போன்றவன்; பிறவிநோய் தீர்ப்பவன்.

ஆராவமுதே! (5-8-1)
ஆராவமுதமாய் அடியேனாவி சுகமே
தித்திப்பாய் (5-8-10)

**121.** சாச்வதஸ்த்தாணு: தேவலோகத்து அமுதம் போலல்லாமல், என்றும் அழிவில்லாமலும், அன்பர்களிடம் நிலைத்தும் இருப்பவன்.

பிரியாது ஆட்செய் என்று பிறப்பு அறுத்து,
ஆள் அறக் கொண்டான் (10-7-10) [ஆட்செய்-கைங்கர்யம் செய், என்று ஆள் கொண்டான், அறக்கொண்டான்.]

**122.** வராரோஹ: (ஆதலால்) சிறந்த ஸ்தானம் உடையவன்.

நலம் அந்தம் இல்லதோர் நாடு (2-8-4)
(இதை உடையவன்)
குழுமித் தேவர் குழாங்கள் கைதொழ (5-5-10)

(தொடரும்)



# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

திரு. மா. வரதராஜன் - திருப்பதி.

## க

கணிசிக்கை - விரும்புகை; சிந்திக்கை; வசமாக்குகை.
கணுந்துயிலும் - கண்ணும் உறங்கப்பெறலாம்.
கணை - ஸ்ரீரங்கம் கோயிலில் ஸந்நிதி வாசலிலும் உள்ளே திருமணத்தூணுக்கு அப்பாலுள்ள குறுக்குக் கழிக்குக் கணை என்று பெயர்.
கணையம் - கோட்டை மதிள்; தழும்பு; கோட்டைக் கதவுத் தாழ்ப்பாள்; குறுக்குத்தடி
கத்தக் கதித்து - கதிப்பு-கொழுப்பு, தக்கத் தடித்து, பக்கப்பருத்து என்று சொல்லுவது போல் கத்தக் கதித்து என்று முழுச்சொல்லாய் மிகவும் கொழுத்து என்று பொருள். செக்கச்சிவேல், பச்சைப்பசேல், வெள்ளைவெளேர், கன்னங்கரேல் என்று சொல்லுவதெல்லாம் நிறத்தின் மிகுதியைக் காட்டுவதாகும்.
கதம் - கோபம், மதம்
கதகனெல் - சீற்றம் கொள்கை; பொறுமைப் படுகை;' ஜ்வலிக்க
கதலிப்பொழில் - வாழைத்தோட்டம்
கதவம் - கதவு
கதறி - கூப்பிட்டுக்கொண்டு
கதி - வழி, புகல், நடை
கதிப்பு - கொழுப்பு; களிப்பு
கதிர் - சூரிய கிரணம்; சூரியன்; சந்திரன்
கதிரம் - கருங்காலி
கதுப்பு - கன்னம்; மாம்பழத்தின் நடுவிலுள்ள கொட்டையை விட்டு இரண்டு பக்கத்தில் நறுக்கின பாகங்கள் கதுப்பு எனப்படும்.
கதுவாய் - குறைகை
கதுவுதல் - பற்றுதல்
கதுவிடுகின்ற - கடிக்கிற
கதுவினார் - தீண்டினார்
கதை - சரித்திரம்
கந்தம் - வாசனை; சந்தனம்; கிழங்கு
கந்தல் - கந்தை; ஒழுக்கமில்லாமை

கப்படம் - வறுமையைக் காட்டும் அழுக்குத்துணி
கம்பம் - நடுக்கம்
கப்பணம் - கழுத்தில் அணியும் பொருள்
கப்பம் - அரசன் விதிக்கும் இறை
கப்பு - கிளை; தோள்; ஆதாரம் கப்பும் கிளையுமாயிருக்கிறது என்று சொல்லுவர்
கபாலி - ருத்ரன்; கபாலிக விரதம் உள்ளவன்
கபிலை - சுரபி; காமதேனு; பசுமாடு
கபோதத்தொளி மாடம் - கபோத வரிசைகளையுடைய மாடம்; அதாவது புரா வரிசைகள் வைத்து வேலை செய்த மாளிகை
கம்பு - கழி; கட்டுத்தறி
கமர் பிளந்து - கமர் - நிலப்பிளவு, பிளந்து - (இங்கு) உண்டாகி. நெஞ்சைக் கமர்கிறது, உஷ்ணத்தால் கமர்கிறது என்று சொல்லுவர். வெக்கையால் பிளந்தது என்பது பொருள்.
கமலப்பாவை
கமலத்திருமாது - பெரிய பிராட்டியார்
கமை - பொறுமை
கயங்கள் - குளங்கள்
கயம் - பெருமை;(தொல்-உரி) குறை; கசம்; யானை; ரோகம்; பரப்பு
கயவர் - கொடியவர்; முன்கை உரம் உடையவர்கள்
கயிறு கயிற்று - நரம்பு; வடம்
மக்காணி - நரம்பும் எலும்புமான உடல்
கரத்தல் - ஒளித்தல்
கரக்கை - மறுக்கை; ஒளிக்கை; காப்பாற்றுகை
கரசரணம் - கைகால்கள்
கரண்டமாடு பொய்கை - நீர்க்காக்கை திரியும் குளம்
கரதலத்தமைதி - கையில் மிடுக்கு
கரவு - ஒளிப்பு; களவு; வஞ்சனை
கரந்தசிலிடம் - மிகவும் நுண்ணிய இடம்
கரந்தன - கரந்து அன-உருமாய்ந்து போதல்

| | | |
|---|---|---|
| கரப்பான் | - | குழந்தைகளுக்கு உடம்பு முழுவதும் பரவும் ஒருவகை சிரங்கு |
| கரம்பனூருத்தமன் | - | கரம்பனூர்-108 திவ்ய தேசங்களுள் ஒன்று. அங்கு உள்ள பெருமான் உத்தமன், தன்னையே கொடுக்கும் வள்ளலான உத்தமன். வழிக்கரையிலே திருவாசலுக்கு ஒரு கதவு இடாதே வந்து கிடக்கிறவன். |
| கரா | - | முதலை |
| கரிக்கோடு | - | ஆனைக்கொம்பு |
| கரிந்து போதல் | - | வெந்துபோதல் |
| கரியநாழிகை | - | அந்திகாலம்; கொடிதான நாழிகை; இரவு கறுத்திருக்கும். அதுக்கு அவயவமான நாழிகையும் கறுத்திருக்கும் என்றபடி. |
| கருங்கடல் | - | நீர் வெண்மையாயினும் நீர்ச் செறிவாலே கடல் கறுத்துத் தோன்றும். |
| கருங்கண் தோகைமயில் | - | கருகின தலைச்சுழிக் கண்ணையுடைய தோகைமயில் |
| கருங்குழல் விட்டு | - | கறுத்து நீண்ட திருக்குழலையுடைய விஷ்ணு |
| கருஞ்சிறுக்கண் | - | கரிய திருமேனியும் இளமையுமுடையவன் |
| கருத்து | - | மனம்; ஸாமர்த்தியம்; சக்தி |
| கருத்தன் | - | ஆற்றலுடையவன; கருத்தில் இருப்பவன் |
| கருத்தாயின செய்து | - | நினைவின்படியே செய்து |
| கருதும்கோயில் | - | விரும்பும் கோயில் |
| கருதுவாய் | - | ஆதரிப்பாய் |
| கருந்தடங் கண்ணி | - | கருகிப் பெருத்த கண்ணையுடையவன் |
| கருந்தரை | - | பாழ்நிலம் |
| கருந்தழைக்கா | - | கருந்தழை-மயில்தோகை கருமை-பெருமை; பெரிய தழைக்கா; தழை-குடை. மயில் தோகையாகிய குடையால் வந்த குளிர்ச்சியைச் சொன்னபடி, கா- சோலை; பெரிய மயில் தோகையாகிற சோலை என்றபடி |
| கருந்தாட்களிறு | - | கருத்துத் திண்ணிதான அடிமையுடைய யானை, குவலயாபீடம் (கம்சனது யானைக்குப் பெயர்) |
| கருந்திணிப்பு | - | கருத்த செறிவு |
| கருந்தேவன் | - | கருமையான திவ்யமான திருமேனியுடையவன் |
| கருமை | - | கறுப்பு; இருட்சி; பெருமை |
| கருநாய் | - | கறுத்தநாய்; சீற்றமுள்ளநாய், குட்டியுள்ள நாய். கரு-குட்டியாய் குட்டியிட்ட நாய். குட்டியைக் காத்து கிடக்குமாகையால் அதுக்கு ஏதாவது தீங்கு ஏற்படுமோ என்று கண்டாரை ஓடிப்போய் கடிக்கும் தன்மையது. |
| கருநாயிறு | - | கறுத்திருக்கிற நீலநிறமாயுள்ள சூரியன் |
| கருநெல் | - | கருவடைந்த நெல் பயிர் |
| கருப்பங்கடடை | - | கருப்பங்கழி அல்லது அடிக் கரும்பு |
| கருப்பட்டி | - | வெல்லம்; சர்க்கரை, அக்காரம் |
| கருப்புக்கட்டி | - | வெல்லம் |
| கரும்பன்னல் காடு | - | அன்னல் கருப்பங்காடு; செடி மிகுதியான கருப்பங்காடு, அன்னல-செடி மிகுதியாயுள்ள; அநதநல-அந்த அழகிய கருப் பங்காடு |
| கருமபிருந்த கட்டி | - | எமபெருமானைப் பற்றிச் சொல்லுமபோது இயற்கையான இனிமையுள்ள ஒரு கரும்பு போலே எல்லையறற இனிமையானவன் என் பர். எல்லாவிததிலும இனிமையாவது- எல்லாவிதத் திலும சுவை ஒரேவிதமாயிருப்பது கருமபு. சாதாரணமாக பழங்கள ஒருபககம புளிபபு, ஒருபக்கம் திததிபபு, ஒருபக்கம கசப்பு துவப்புமாயிருககும். ஆனால கருமபு அப் படியில்லை. 'இருந்த' என்று சொனனதால் 'உள்ளபடியே' எனறுய கோது எதுவும் இல லாமையைச சொல்லுகிறது. |
| கருமகள் | - | நீசமான பெண; சணடாளி |
| கருமா கடல் | - | கருத்த பெரிய கடல |
| கருமா முறி-மேனி | - | கருத்த மாநதளிரின் முறி போன்ற மேனி; முறி-மாந்தளிர் இதனால மெனமை சொனனபடி. |
| கருமாயம | - | கரபபதகில் சிசு படுகிற ஆச சரயமான துககம். இதென னடா கருமாயம் எனறு சொல்லுவதுண்டு. |
| கருமாரிபாய்கை | - | இரண்டு விசிகளை நட்டு அதிலே படாமல் மதிளில் உயர நின்று குதிககை; அருமை எனறபடி. நப் பின்னையை மணப்பதற்கா |

| | |
|---|---|
| | கக் கண்ணன் ஏழு எருது களை அடக்குகைக்கு அவற் றின் கொம்புகளில் பாய்ந்து கொன்ற அருமையைச் சொல் லுமிடத்தில் கருமாரிபாய்கை என்று உரைகளில் உரைப்பர். |
| கருமேனி - | தாபம் எல்லாம் ஆறும்படி குளிர்ந்த வடிவு. |
| கருவரங்கம் - | கர்ப்பஸ்தானம் |
| கருவரை - | பெரியமலை |
| கருவார் கற்பகம்- | சுவர்க்கத்தில் நடுவில் நிற் கிறது கற்பகம். அவ்வாறு இல்லாமல் பூமியில் வேர்ப் பற்று உண்டான கற்பகம். கரு-கர்ப்பம். அதிலே பொருந தினதாகையால் வேர்ப்பற்று என்றபடி |
| கருவாரணம் - | கருத்த யானை |
| கருவி - | கரணம்; உபாயம்; கத்தி; சித் திரம்; இந்திரியம் |
| கருவிப்பை - | ஆயுதப்பை |
| கருவிலி - | ஆணபிளளை |
| கருவிச்செய் தான் - | கருவுதல்-கோபம கொளளுதல் |
| கருவிளை - | காக்கணமபூ |
| கருவூர் - | பாண்டியனுடைய பட்டணம |
| கருவூலம் - | நகைகளை வைக்கும் அறை; ஸ்ரீபணடாரம் என்பர். |
| கருளக்கொடி - | கருடக்கொடி |
| கருளப்புள் - | கருடனைக் கருளன் என்பர. கரு-கறுப்பாய், சீற்றமாய் எதி ரிகள் மேல் சீற்றமுடையவன |
| கரை - | ஒலி, நதிக்கரை; இடம்; எல்லை |
| கரைபுரள - | பெருக்கெடுக்கை, அதிகமாக, |
| கரைச்சல் கெட்டு - | கரைச்சல்-கலக்கம் அதுகெட்டு-நீங்கி, மனககலக கம் நீங்கி |
| கரைசெய்மாக்க டல் - | தானே தனக்குக கரை கடடிக் கொண்டு நிற்கிறகடல் |
| கரைநது - | உருகி, ஈடுபடடு, உளளழிநது |
| கரையலைக்கும் - | கரையிலே ஏறிடும |
| கறையுரல் - | பெரிய உரல்; சுற்றிலும வரமபு இருககினற உரல்; விளிமபைச சுறறி வேலைப பாடு செயத வில |
| கல்லுங்கை - | தோணடுகை; ஒலிககை |
| கல்லணை - | பாறைகளான படுககை |
| கல்லதிர் - | கல்நிறைநதிருககும வழி |
| கலலருவி - | ஒலியுடைய அருவி; நீரகறக ளில வீழுவதால பெரிய சப் தததோடு வரும் அருவி |
| கலலறை - | திருககோயில மணிமயமா னது |
| கல்விச்சாரம் - | கல்விப்பயன் |
| கலக்குண்ட - | கலங்கின |
| கலசப்பானை - | கிண்டி, ஸ்ரீரங்கம் கோயில் பேச்சுவழககு தீர்த்தம் எடுத் துககொடுககும் அந்தரஙக பரி கரருக்குக் கலசப்பானை எடுப் பார் என்று பெயர். |
| கலந்து கட்டி - | நலலதும் தீதும் கலநதது. |
| கலம்பகன் - | கதம்பம்-பலவித நிறங்களால் ஆன மலரகளால் தொடுத்த மாலை |
| கலங்காப்பெரு நகரம் - | மாறுபாடில்லாத பரமபதம் |
| கலவிருககை - | கொலுக்காவடி; ஓலக்கம்; நெஞ்சு பொருந்துமிடம்; கலந்த இருக்கை |
| கலன் - | ஆபரணம் |
| கலி - | ஆரவாரம்; மிடுக்கு, மிகுதி |
| கலாய்த்தூய் - | கலந்து தாவி; கலசித்தூவி |
| கலிககட்டு - | நாராலே இறுக்கக்கட்டுகை |
| கலிககச்சு - | வலுவான கச்சுப்பட்டை; இடுப்பில் வரிஞ்சு கட்டுவது. |
| கலிகன்றி - | திருமஙகையாழ்வாருககுப் பெயர் |
| கலிகெழுமாட வீதி - | வலிமிகக மாடஙகளையுடைய வீதி |
| கலிங்கம் - | கருப்புத்துணி |
| கலியர் - | பசியுடையவர |
| கலியன் - | திருமங்கையாழ்வாருடைய பெயர் |
| கலுழி - | கலங்கல் நீர் |
| கலுழ்வன - | கலங்குவன் |
| கலை - | உடை; சாஸ்திரம் |
| கலைபபல ஞானம் - | பலவகைப்பட்ட வேதங்கள் |
| கலையறக்கற்ற மாந்தர் - | கலை-வேதம, வேதததை முழு மையாகக் கற்றவர்கள்; வேத தாதபர்யம் கைபபடடவர்கள். |
| கலையிலங்கு மொழியாளர் - | விரிவான சாஸ்திரங்கள் முழு வதும் தெரியும்படி வரிக் கொளளலாயிருபபவர். வரிக கொள்ளுகையாவது வரி யடைவே எணணிககொள ளுகை. கலையிலங்காநிறகும் படி பேசுபவரகள். |
| கலையோ வரை- யிலலை | உடை அரையில் பொருநதும படி உடுககவிலலை. உடுககு மிடம் அறியாள |
| கலைவாழ் பிணை | ஆணமானோடுகூடின பெண மான |

(தொடரும்)



# பரமாச்சாரியாரும் அவரது சீடர்களும்

திரு. பராசரம் பாலசுப்ரமண்யம் - திருச்சானூர்.

மனித வாழ்க்கையில் மிக உயர்ந்தநிலையெதுவெனில், வியாதியிலிருந்து, துன்பத்திலிருந்து, வினைப்பயனிலிருந்து நிலையான விடுதலைப்பெற வேண்டுமென்பதேயாகும். மற்ற உயிரினங்களை ஒப்பு நோக்குங்கால், மனிதப் பிறவி மிக உயர்ந்தது. 'துர்லபம் மானுஷம் தேஹம்' என சங்கரர் விவேகசூடாமணியிலும், திருவாசகத்தில் 'மனித்தபிறவியும் வேண்டுவதே இம்மானிலத்தே' என மாணிக்கவாசகரும், 'அரிது அரிது மானிடராய் பிறத்தலரிது' என ஔவை பிராட்டியும், இம்மனிதப்பிறவியை மிகவும் உயர்த்திப் பாராட்டியுள்ளனர். சங்கீத உலகின் மும்மூர்த்திகளை எல்லோரும் அறிவர். ஆன்மீக உலகில் மும்மூர்த்திகள் என்பது ஆதிசங்கரர், இராமானுஜர், மத்துவாசாரியார் ஆகும். இம்மூவர்களும் மனிதப்பிறவி எடுத்ததின் முழுப்பயனையும் பெற்றனர். நால்வர், நாயன்மார்கள், ஆழ்வார்கள், ஏகநாதர், சைதன்யர், கபீர்தாசர், வடலூர் வள்ளலார், இராமகிருஷ்ணபரமஹம்ஸர், விவேகானந்தர், பகவான் ரமணமஹரிஷி, மீராபாய், ஔவையார், சாரதா தேவியார் ஆகியோரும் மனிதப் பிறவி எடுத்ததின் பயனைப் பெற்றதன்றி, மக்கள் யாவரும் அதனைப்பெற்று மரணமிலாப் பெருவாழ்வு வாழ மார்க்கங்களையும் காட்டினர். மேலே நான் குறிப்பிட்டவர்களில் பலர் துறவறம் மேற்கொண்டு ஆன்மீக வாழ்க்கையில் பரம்பொருளுடன் இரண்டறக் கலந்தவர்கள். இப்படிச் சிறந்த மனிதப் பிறவி எடுக்கவும், துறவறம் மேற்கொள்ளவும் யாது காரணம்? உலகில் எவ்வளவோ கோடி மக்கள் பிறக்கும்போது ஒரு குறிப்பிட்ட சிலர் மட்டும் துறவறம் மேற்கொள்ளுவானேன்? இதற்கு முன்வினைப் பயன் எனச் சிலர் பகருவார்கள். ஒருவரது ஜாதகத்தில் ஏற்பட்டுள்ள யோகமே காரணம் என்பர் ஜோதிடம் அறிந்த வித்தகர். ஒருவன் பக்தி மார்க்கத்திலும், ஆசார அனுஷ்டானத்திலும் சிறந்து விளங்க வேண்டுமெனின் அவரது ஜாதகத்தில் குருபலம் பெற்று, ஐந்து, ஒன்பது ஆகிய வீடுகளின் தொடர்பு பெற்றிருத்தல் நலம்.

அக் குரு ஞானத்தையும், நல்லெண்ணம், நற்செயல் ஆகியவைகளையும் அருளுவார். அடுத்து துறவறம் மேற்கொண்டவர்களுக்கு உலக இன்பங்களில் விரக்தி ஏற்படவேண்டும். இதனை சனிக்கிரகம் தான் வழங்குவார். சனியருளில்லையேல் சந்நியாசம் இல்லை எனலாம். புதன் ஆழ்ந்த அறிவையும், வேத சாஸ்த்திர புலமையும் அருளுவார். மேலும் ஜாதகத்தில் ஒன்று, ஐந்து, ஒன்பது, பத்து, பதினொன்று மற்றும் பன்னிரண்டு ஆகிய வீடுகளும் சிறக்கவேண்டும். மேற்கொண்ட கோள்களுடன் தொடர்புகொண்டால் விசேஷம். லக்னம் அல்லது ஒன்றும்வீடு என்பது ஒருவரது மனநிலையையும், பழக்கவழக்கங்களையும் குறிப்பிடுவதாகும். ஐந்து என்னும் பஞ்சமஸ்தானமானது, உள்ளுணர்வு, ஆன்மீக வாழ்க்கைக்கு ஏற்ற மனவளம், உபதேசம் பெறும் மந்திரம் ஆகியவற்றையும் குறிக்கும்.

ஒன்பதாம் வீடு, தந்தை, குரு, தெய்வம், உயர்கல்வி, தெய்வவழிபாடு, அறவழி நடத்தல், பெரியோரை மதித்தல், ஜபம், தியானம் செய்தல் ஆகியவற்றைக் குறிக்கும். பத்தாம் வீடு செய்யும் கருமத்தை- தொழிலைக் குறிக்கும். இங்கு நற்கருமம் என்று கொள்க . பதினொன்றும் வீடு எண்ணம் ஈடேறல், சித்திபெறல், செய்த காரியத்தில் விளையும் பயன் ஆகியவற்றைக் குறிப்பிடுவதாகும்.

பன்னிரண்டாம் வீடு என்பது விடுதலை, மோட்சம், தியானத்தில் சமாதிநிலை ஆகியவற்றையும் குறிக்கும். இனிநாட்டு மக்களால் பெரியவர் என்றும், நடமாடும் தெய்வம் என்றும், பரமாச்சாரியார் என்றும் போற்றப் பட்ட காஞ்சி காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீஸ்ரீஸ்ரீசந்திர சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஜாதகம் கொண்டு, மேற்சொன்ன ஜோதிட விளக்கங்களை ஆராய்வோம். பரமாச்சாரியாரின் ஜாதகத்தை விவரிக்க அடியேன் தகுதியுடையவனன்று. எனினும் ஜோதிட விஞ்ஞானத்தில் கூறிய கருத்துக்களைக் கொண்டு, அவரது ஜாதகத்தை ஆராயலாம்.

பரமாச்சாரியார் அவர்கள் 20-

5-1894 அன்று நாழிகை 19 வினாடிகள் 12ற்குப் பிறந்தார். லக்னம் சிம்மத்தில் விழுவதால், பிறவிலேயே சிறந்த குணமும் பண்பும் ஏற்பட்டன. ஸ்திர ராசியில் லக்னம் விழுவதால், எல்லா தடைகளையும் வெல்லும் உறுதியான மனவளம் உண்டு. ஆத்மகாரகனாகிய சூரியன் சிம்மத்தின் அதிபதியாகும். அவர் ஒன்பதாம் பாவத்தில் குரு மற்றும் புதன் ஆகிய கிரகங்களுடன் அமர்ந்தார். எனவே ஆன்ம ஒளி பெற்று விளங்குதல் அவரது இயற்கையாயிற்று. குரு ஐந்தாம் வீட்டிற்குரியவர். புதன் பதினொன்றிற்குரியவர். மனோகாரகனாகிய சந்திரன் விருச்சிகத்தில் சனியன் சாரம் பெற்ருர். விரக்தியைக் கொடுக்கும சனி இரண்டில் ஞானகாரகனாகிய கேதுவுடன் வீற்றிருக்கிருர். சந்திரன் செவ்வாயின் வீட்டிலும், சனியின் நட்சத்திரத்திலும் இருநது, குரு, புதன், சூரியன ஆகியோரின் பாரவையைப் பெற்றதாலும், வேத சாஸ்த்திரத்தில் சிறந்த புலமையும், ஆன்மஞானமும் பெற்ருர். சந்திரன் பத்தாம் வீட்டையும், அதிலுள்ள குரு, புதன் மற்றும் சூரியன் ஆகியவர்களை நோக்குவதாலும், யாகம் யக்ஞம் போன்ற புனிதக் கருமஞ் செய்து சிறந்து விளங்கினார். சந்திரன் பன்னிரண்டாம் வீட்டோனாகி மூன்றும் பாவத்தில் நின்றதால் இப்பாரத பூமியை பாத யாத்திரையாகவே வலம் வந்தார். எனவே இவரது துறவு வாழ்க்கைக்கு சந்திரன், சூரியன், குரு, புதன், சனி ஆகியோரும், ஒன்று, ஐந்து, ஒன்பது, பத்து, பதினொன்று மற்றும் பன்னிரண்டாம் வீடுகளும் நெருங்கிய தொடர்பு கொண்டு விளங்கியன. அவரது நினைவாற்றல் மிகவும் அபாரமானது. எல்லோரையும் வியக்க வைப்பது. சந்திரன், சனியின் சாரம் பெற்று மூனரும் பாவததிலிருப்பதும், அச்சந்திரனை குரு, புதன், லக்னாதிபதி சூரியன் ஆகியோர் நோக்குவதுமாகும். இவர் 8-1-1994 அன்று மகாசமாதி எய்தினார். அப்பொழுது குரு தசையில் சூரிய புக்தியும், சனி அந்திரமும் நடைபெற்றுக் கொண்டிருந்தது. லக்னத்திற்கு இரண்டில் சனியும், ஏழில் செவ்வாயும் உள்ளனர். செவ்வாய் நான்காம் பார்வையாக ஒன்பதை நோக்குகிருர். எனவே இரண்டு, ஏழு, ஒன்பது ஆகிய வீடுகள் தொடர்பு கொண்டு அவருக்கு மோட்ச சாம்ராஜ்ஜியத்தை வழங்கின.

அடுத்து 'புதுப்பெரியவர்' என எல்லோராலும் கொண்டாடப்பட்ட ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் ஜாதகத்தைப் பார்ப்போம். இவர் 18-7-1935ல் பிறந்தார். இவரது ஜாதகம் பின்வருமாறு:

இவர் 1954ம் வருடம் மார்ச்சு மாதம் சந்நியாசம் பெற்றுக் கொண்டார். அப்பொழுது இராகுதசையில் செவவாய் புக்தி நடந்துகொண்டிருந்து.

லக்னம் விரக்தியை அளிக்கும் சனியின் ராசியிலும், ஆத்மகாரகனாகிய சூரியன் நட்சத்திரத்திலும் விழுந்தது. எனவே சந்நியாசத்திற்கு வேண்டிய முக்கியமான கோள்களில் சனிக்கும் சூரியனுக்கும் லக்னத்து

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் ராகு | | குரு புதன் சூரியன் | |
| செவ்வாய் | இராசி | | |
| | | | ல/ |
| | சந்திரன் | | கேது சனி |

| | | | |
|---|---|---|---|
| | குரு புதன் சூரியன் | | |
| சுக்ரன் ராகு | பாவம் | | |
| செவ்வாய் | | | ல/ கேது |
| | | சந்திரன் | சனி |

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | | கேது | |
| புதன் | நவாம்ஸம் | | |
| சுக்ரன் குரு | | | |
| | செவ்வாய் ராகு சந்திரன் | ல/ | சனி |

| | | | |
|---|---|---|---|
| | | | புதன் கேது |
| சனி சந்திரன் | இராசி | | சூரியன் |
| ல/ | | | சுக்ரன் |
| ராகு | | குரு செவ் | |

| | | | |
|---|---|---|---|
| | | | புதன் கேது சூரியன் |
| சனி | பாவம் | | |
| சந்திரன் ல/ | | | சுக்ரன் |
| ராகு | | குரு | செவ்வாய் |

| | | | |
|---|---|---|---|
| ல/ சனி | குரு | | கேது |
| | நவாம்ஸம் | | சூரியன் |
| | | | சுக்ரன் |
| ராகு | சந்திரன் | செவ்வாய் | |

டன் கூடிய தொடர்பு வலுத்தது. மனோகாரகனாகிய சந்திரன் லக்கின பாவத்திலேயே அமர்ந்து ஒன்பதாம் பாவத்திலிருக்கும் செவ்வாயின் சாரம் பெற்ருர். எனவே லக்கின பாவத்திற்கு ஒன்பதிலுளள கிரகத்தின் தொடர்பும் உண்டாயிற்று. பத்தாம் பாவத்தில் குருவீற்றிருக்கிருர். அந்த குருவும் ஒன்பதாம் பாவத்திலிருக்கும் செவ்வாயின் நட்சத்திரத்தில் வீற்றிருக்கிருர். செவ்வாய் நான்காம் வீட்டிற்கும் பதினொன்ரும் வீட்டிற்கும் உரியவர். ஐந்தாம் வீடு புதனுக்குரியது. புதனுடன் ஞான காரகனாகிய கேது ஐந்திலேயே உள்ளார். பன்னிரண்டிலுள்ள இராகு சூரியனின் சாரம் பெற்று குருவின் வீடாகிய தனுசுவில் உள்ளார். எனவே இராகுவிறகுப் பத்தாம் வீட்டுத் தொடரபும், புதனால் பார்ககப்படுவதினால ஐந்தாம் வீடடுத் தொடர்பும் ஏற்பட்டது. செவ்வாய் தன் சுயசாரம் பெற்று ஒன்பதிலுள்ளார். எனவே நான்கு, ஒன்பது, பதினொன்ரும் வீட்டின் வலிமையான குறிகாட்டியாகும். எனவே இவர் சந்நியாசம் ஸ்வீகிரிக்கும்போது ஜோதிட சாஸத்திரத்தில கூறியபடி, குரு, சூரியன், சனி, புதன, ஆகிய கோளகளும், ஒன்று, ஐந்து, ஒன்பது, பத்து பதினொனறு, பனனிரண்டு ஆகிய வீடுகளுமு தொடர்பு கொண்டிருநதன என்பது நன்கு விளங்கும். குருவின் பார்வை சந்திரனின் மீதும், சனியின் மீதும் படு

| | | | |
|---|---|---|---|
| ராகு | சனி சுக்ரன் | | |
| சூரியன் புதன் | இராசி | | |
| | | | |
| சந்திரன் | செவ்வாய் | | கேது குரு ல/ |

| | | | |
|---|---|---|---|
| சனி சுக்ரன் | | | |
| லக் சூரியன் | பாவம | | |
| புதன் | | | கேது குரு |
| சந்திரன் | | செவ்வாய் | ல/ |

| | | | |
|---|---|---|---|
| குரு | சனி சுக்ரன் | | சூரியன் |
| கேது | நவாம்ஸம் | | |
| | | | ராகு |
| புதன் சந்திரன் | செவ்வாய் | | ல/ |

வதால், மனோநிக்கிரகம் எளி தில் பெற்று, ஜப, தியானத்தில் மிகவும் மேல்நிலையைப் பெற் ருர். நாம் ஏற்கனவே பார்த் தது போல் இராகுவிற்கு ஐந்து, ஒன்பது பன்னிரண்டாம் வீடு, பத்தாம வீடு ஆகியவற்றின் தொடரபு ஏற்பட்டதால் புனர் ஜன்மமின்றி, மோட்சம் அவரது காலடியில் கிடக்கும்.

அடுத்து, 'பாலபெரியவர்' என அழைக்கப்பெற்ற ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சங் கர விஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளைப் பற்றிப் பாரப் போம். இவர் 13-3-1969ல் பிறந்தார். புதன் லக்கினத் திற்கும் பத்தாம் வீட்டிற்குமுரி யவர். அவர் லக்கின பாவத் திற்கு ஐந்தில் வீற்றிருக்கிருர. லக்னம் செவ்வாயின் நட்சத்தி ரமான சித்திரை இரண்டாம் பாதத்தில் விழுகிறது. அச் செவ்வாய் சுயசாரம் பெறறு வர்கோத்தும பலம் பெறுரு. புதன் இரண்டாம் பாவத்தி லுள்ள செவ்வாயின் நட்சத் திரததிலுள்ளார். சூரியன் பன்னிரண்டாம் வீட்டிலமர்நத குருவின வீட்டிலுளள இராகு வின் நட்சத்திரத்திலமரந்தார். குரு ஞானகாரகனாகிய கேது வுடன் பனனிரண்டாம பாவத திலமர்ந்தார். எனவே சூரிய னுக்குப் பனனிரணடாம வீட் டின் தொடரபு பலமாக உள ளது. பதினொன்ரும் வீடடிற் குரிய சந்திரன், ஆதமகாரகனா கிய சூரியனின நட்சததிரல மர்ந்தார்.

அச்சந்திரன குருவின் கேநதி ரத்திலுள்ளர். நவாமஸத்திலும் தனுசுவில் அமரநது வர்கோத் தம பலம் பெற்ருர்.அவர சந நியாஸம் பெறும்போது சநதி. தசையில் சுக்ரபுக்தி, புதன் அந் திரம் நடைபெற்றது. சநதிர னைப் பற்றியும் புதனைப் பற் றியும் ஏற்கனவே பார்த்தோம். சுகிரன் ஒன்பதாம் வீட்டின் அதிபதி. சுக்ரன் நட்சத்திரத் தில் எவரும் இல்லை. எனவே சுக்கிரன் ஒன்பதாம் வீட்டின் வலிமையான குறிகாட்டியாகும். அந்தச் சுக்கிரன் விரக்கியைக் கொடுக்கிற சனியுடன் இணைந் துள்ளார். எனவே, ஒன்று, ஐந்து, ஒன்பது, பத்து, பதி னொன்று மற்றும் பன்னிரண் டாம் வீடுகளுக்குத் தொடர்பும், குரு, சனி, சூரியன் சந்தி ரன், புதன் ஆகிய கோட்களுக் குத் தொடர்பும் ஏற்பட்டதால் 1983-ல் சந்நியாசம் பெற்ருர். அவருக்குத் தற்போது நடைபெ றும் இராகு தசையும், பின்னர் வரப்போகும் குருதசை, சனி மற் றும் புததசைகளும் மிக உன்னத மானது. ஆனமீக உலகில் ஒளி வீசும் சிறந்த நட்சத்திரமாகத் திகழ்வார். சனாதன தர்மத்தை உலகெங்கும் பரவச்செய்து, பார தத்தை ஞானபூமியாக உலகோர் பாராட்டும் வகையில் சிறந்த ஞானத்தொண்டாற்றுவார்.

மேற்கண்ட மும்மூர்த்திகளின் பொற் கமல பாதங்களைப் பணிந்து இதனை முடிக்கிறேன்.



## பஞ்ச சபைகள்

1. திருவாலங்காடு - இரத்தினசபை
2. சிதம்பரம் - கனகசபை (பொன்னம்பலம்)
3. மதுரை - ரஜத சபை (வெள்ளியம்பலம்)
4. திருநெல்வேலி - தாமிரசபை (செம்பலம்பல்ம்)
5. திருக்குற்ருலம் - சித்ர சபை

## பஞ்ச தாண்டவ ஸ்தலங்கள்

1. ஆனந்த தாண்டவம் - சிதம்பரம்
2. அஜபா தாண்டவம் - திருவாரூர்
3. சுந்தர தாண்டவம் - திருவாலவாய் (மதுரை)
4. ஊர்த்துவ தாண்டவம் - திருவாலங்காடு & அவிநாசி
5. பிரம்ம தாண்டவம் - திருமுருகன்பூண்டி

## ஐந்து கூத்து

1. சிவாநந்த கூத்து
2. பொதிபதிக் கூத்து
3. அற்புதக் கூத்து
4. சுந்தரக் கூத்து
5. பொற்றிலைக் கூத்து

## பஞ்ச லிங்கங்கள்

1. சிருங்கேரி - போக லிங்கம்
2. கேதாரம் - முக்தி லிங்கம்
3. நேபாளம் - வர லிங்கம்
4. சிதம்பரம் - மோட்ச லிங்கம்
5. காஞ்சிபுரம் - யோக லிங்கம்

## பஞ்ச மூர்த்திகள்

1. விநாயகர், 2. சோமஸ்கந்தர் 3. அம்பிகை, 4. முருகன் 5. சண்டேசுரநாயனார்.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன், கோவை.

# செங்கட்சீயம்

திரு. வி. கோவிந்தன் - புதுப்பேட்டை.

எம்பெருமான் ஸ்ரீமான் நாராயணனுக்கும் பிரகலாதாழ்வாருக்கும் பேதமில்லை. "சத்யம ஞானம் அனந்தம் பிரம்மா" என்பது வேதம். இறைவன் தர்மத்தின் மூர்த்தி, சத்தியமூர்த்தி, வேத வடிவினன், அருள் வடிவினன், ஞானவடிவினன், உலகனைத்தும் ஓர் வடிவமானவன். இத்தகைய தன்மைகளை உடைய இறைவன், இப்பண்புகள் அனைத்தும் பிரகலாதனிடம் உண்டாகுமாறு நல்லாசிகளைக் கூறினான்.

நல்லறமும் மெய்ம்மையும்
நான்மறையும், நல்லருளும்
எல்லை இலா ஞாலமும்,
ஈறு இலா எப்பொருளும்
தொல்லைசால் எண்குணங்களும்
நின்சொல் தொழில் செய்க!
நல்ல உரு ஒளியாய்
நானாம் வளர்கநீ.
[கம்ப-யுத்த-இரண்-178]

"சிறந்த உடல் அழகுமிக்கவனே! உயர்ந்த தருமமும், சத்தியமும், நான்கு வேதங்களும், சிறந்த கருணையும், எல்லை இல்லாத ஞானமும், முடிவில்லாத எவ்வகைப்பட்ட பொருள்களும், தொன்மை வாய்ந்த எட்டு வகையான குணங்களும் உன் ஆணையை ஏற்றுக் கொண்டு தொழில் ஆற்றக் கடவன. நீ நானாகவே விளங்கி வாழ்வாயாக!"

அதுமட்டுமல்லாமல் பிரகலாதனுக்கு நரசிங்கப் பெருமான் வரம் அளிக்கின்ற காலத்தில் "முன்பு தோன்றிய ஐம்பெரும் பூதங்கள் அழிவு பெற்றபோதும் நீ உன் வாழ்நாள் குன்றி அழிவெய்தாமல் என்னைப் போலவே என்றும் இருப்பவன் ஆவாய்" என்றும் வரம் அளிக்கின்றார்.

அன்னானை நோக்கி அருள்சுரந்த
நெஞ்சினனாய்
என்னானை வல்லன் எனமகிழ்ந்த
பேரீசன்
முன்னான பூதங்கள் யாவையும்
முற்றிடினும்
உன்னான் உளவாய்நீ என்போல்
உளை என்றான்
--[கம்ப-யுத்த-இரண்-170]

பிரகலாதனை இறைவன் "ஆத்மஞானி" என்றே குறிப்பிடுகின்றார். அதனை இப்பாடலில் 'வல்லன்' என்ற சொல்லால் சுட்டுகின்றார். உலகில் தோன்றிய எல்லாப்பொருளும் ஒருநாள் முடிவெய்தும்.



அவ்வாறு இறுதி எய்துகின்ற காலத்தை "யுகப்பிரளயம்" என்பர். இதனை மகாப் பிரளயம் என்றும், வேறு வகையாகவும் குறிப்பிடுவர்.

எனவே பிரகலாதன் இறைவனுக்குச் சமமானவன். சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தவன். இத்தன்மையினாலேயே கீதையில் கண்ணபிரான் 'பிரஹ்லாத ஸ்சாஸ்மி தைத்யானாம்' (கீதை10-30) என்று கூறியுள்ளார். உலகில் சாகாவரம் பெற்றவர் எழுவர். அசுவத்தாமன், மகாபலி, வியாசன், அநுமன், விபீடணன், கிருபன், பரசுராமன் போன்றோரே அவர்கள்.

இருப்பினும் பிரகலாத, நாரத, பாரசர, புண்டரீக, வியாசர், அம்பரீஷர், சுகர், சௌநகர், காசியபர் ஆகிய ஒன்பது பேரில் பிரகலாதனுக்கே முதலிடம் கொடுத்துள்ளனர்.

உலக உயிர்களைப் படைத்துக் காத்து ஒடுக்கவல்ல ஆற்றல் பெற்ற இறைவன் ஒருவன் உளன் என்னும் தெளிவற்றவன் இரணியன். தெய்வம் உண்டெனத் தெளிந்த நல்ல உணர்வுடையவன் அவன் மகனாகிய பிரகலாதன். இரணியன் தன் மகனான பிரகலாதனுக்குப் பல தொல்லைகளைச் செய்தான். பிரகலாதன் திருமாலின் திருப்பெயராகிய திருஎட்டெழுத்தினை ஓதி உயர்வெய்தினார். இதனைக் கம்பநாட்டாழ்வார் இரணியன் வதைப் படலத்தில் மிக அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

கருவாய் இருக்கும் பொழுதே நாரதனுடைய அறவுரையைப் பெற்றவர் என்பர். பிரகலாதனுக்குத் தன்னுடைய உயர்வுகள் யாவற்றையும் எடுத்துக் கூறி, தானே உலகில் ஒப்பற்றவன் என்று எடுத்துக்கூறுகின்றான். தன்னுடைய பெயரே ஓதத் தக்கது என்பதனையும் உணர்த்துகின்றான். ஆனால் "திருமால் தன் குலத்திற்கு எதிரி; தன்னிடம் தோல்வியுற்று அஞ்சி ஓடியவன்" என்றெல்லாம் இரண்யன் கூறுகின்றான்.

ஆனால் பிரகலாதன், "வேதத்தில் விரித்துரைக்கப்படும் பரம்பொருள் திருமாலே ஆவார்; அவரே உலகத் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் ஆதாரமாய் விளங்குகின்றார்; திருமாலை இகழ்வோர் தீமை அடைவர்," என்று கூறினான்.

மகனின் பேச்சைக் கேட்டு இரணிய்ன் கோபம் கொண்டான். தன் ஏவலர்கள் மூலம் பற்பலத் தொல்லைகளைத் தந்தான். திருமாலின் ஆயிரம் திருநாமங்களை எண்ணி இருந்தபடியே அத்துன்பங்களில் இருந்து நீங்கப் பெற்றான். இதனால் சீற்றம் கொண்ட இரணியன், "இனிமேல் இவனுடைய உயிரை நானே போக்குவேன்" என்று கூறி அதனைச் செயல்படுத்த முற்பட்டான்.

ஆனால் பிரகலாதன் "தந்தையே! என்னுடைய உயிர் இவவுலகைப் படைத்தவனாகிய இறைவனுககே உரியது; எனவே உன்னால் அழிக்கத் தககதன்று" என்று கூறினார். அதைக் கேட்டு இரணியன், "அந்த இறைவன எங்கே இருக்கின்றான்?" என்று கேட்டான். அதற்குப் பிரகலாதன், "உலகும உயிரும் தந்த பெருமான், மலரில் மணம் போலவும், எள்ளில் எண்ணெய் போலவும் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான்" என்று கூறுகின்றான்.

உடனே இரணியன், "அவன் எங்கும் உளனாயின் அவனை இப்பொழுதே இங்கேயே காட்டுக; காட்டாயாகில் உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று கூறினான். பிரகலாதன், "நான் தொட்ட இடங்களில் எல்லாம் எம்பெருமான் ஸ்ரீமான் நாராயணன் தோன்றுவான்; அவ்வாறு தோன்றாவிடில், நான் அவனுடைய உண்மையான அடியவன் அல்லேன்" என்று சொன்னான்.

உடனே இரணியன் அங்கிருந்த தூண் ஒன்றைத் தன் கையால் அறைந்தான். அத்தூணில் இருந்து நரசிங்கம் பெரும் சிரிப்புடன் தோன்றியது. தான் சுட்டிக்காட்டிய வண்ணம், இறைவன் தோன்றியமை கண்டு பிரகலாதன் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தான். அதனைக் கம்பர்,

நகை திறந்து இலங்கப் பொங்கி
நன்று நன்று என்ன நக்கு
விசைதிறந்து உருமு வீழ்ந்தது
என்னுமோர் தூணின் வென்றி
இசைதிறந்து உயர்ந்த கையால்
எற்றினான் எற்றலோடும்
திசைதிறந்து அண்டம் கீறச்
சிரித்ததோர் செங்கட் சீயம்
(--கம்ப-யுத்த-இரண்-127)

"பிரகலாதனுடைய மொழியைக் கேட்ட இரணியன் மனக்கிளர்ச்சி அடைந்து "நல்லது; நல்லது" என்று கூறிச் சிரித்தான். பின் இடி விழுந்தது போன்ற வேகத்துடன் ஒரு தூணில், வெற்றி மிக்கத் தன் கைகளால் அறைந்தான். அவ்வாறு அறைந்த அளவில் கண்கள் சிவக்கப் பெற்ற ஒர சிங்கமானது, திசைகள அனைத

தும் கிழிய அண்டம் பிளக்கு மாறு வெடிச்சிரிப்புடன் வெளிப் பட்டது" என்று கூறுகின்றான்.

இறைவனை உணரும் நல் ஞானம் பெற்றவர் பிரகலா தன். இறைவனை அவன் அருளால் மட்டுமின்றித் தன் அறிவு ஒன்றையே துணையா கக் கொண்டு தேடிக் காண முற்படுவோர் எத்தகைய பேர றிவு உடையவராய் இருப்பினும், அன்னார் தன்னை நெருங்கமு டியாத வண்ணம், நெடுந் தூரத்தினனாக அப்பால் செல் வது இறைவனுடைய இயல்பு ஆகும். எனவே அவனுடைய அருளாலேயே அவனைக் காண முடியும். அவ்வாறு கண்ட வன் பிரகலாதன். அதனால் தான் சிங்க உருவுடன் வெளிப் பட்ட இறைவனைக் கண்டவு டன் பிரகலாதன் பெருமகிழ்ச்சி அடைந்தான். ஆனந்தக் கூத் தாடினான். இறைவனுடைய கருணைத் தன்மையை எண்ணி நெஞ்சம் நெக்குருகி அழுதான். அப்பெருமானின் புகழ்த்திறத் தைப் பாடி அரற்றினான். தன் சிவந்தக் கைகளைத் தலைமேல் கூப்பித் தொழுதான். கீழே விழுந்து வணங்கினான். துள் ளிக்குதித்து ஓடி உலகமெல்லாம் உழப்பினான்.

ஆடினான்; அழுதான்; பாடி
அரற்றினான்; சிரத்தில் செங்கை
சூடினான்; தொழுதான்; ஓடி
உலகமெல்லாம்
துகைத்தான் துள்ளி
--[கம்ப-யுத்த-இரணி- 128]

இப்படி பெருமான் வெளிப் பட்டதைக் கண்டு மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தான். சிரித்த தோர் செங்கட்சீயம் என்ற தொடருக்கு 'மிகுந்த கோபத்து டன் பெருமான் வெளிப்பட்ட தாக' பலர் பொருள் கொள்வர். தன் அடியவரான பிரகலாதன் பொருட்டே அங்கு நரசிங்கமூர்த் தியாக வெளிப்படுகின்றார். அத் துடன் அவர் தோற்றத்தைக் கண்டு பிரகலாதன் சற்றும் அஞ்சவில்லை; மாறாக ஆனந் தக் கூத்தாடுகின்றார். மகிழ்வு அடைகின்றார். எனவே அவர் வெளிப்படும் பொழுதே கோபத் துடன் வெளிப்பட்டார் என்று சொல்லுதற்கில்லை.

அதுமட்டுமின்றி அதன் பின் னர் "ஆரடா சிரித்தது?" என்று இரணியன் வினவுகின் றான். போருக்கு வரும்படி கூறு கின்றான். இறைவன் அண்ட மெல்லாம் பிளக்கும்படி விஸ்வ ரூபம் கொள்கின்றார். பின் னர் அசுரர்களை எல்லாம் தன் அளவற்ற கைகளால் அழிக்கின் றார். இரணியனும் நரசிம்மமாக வந்த திருமாலும் போரிடுகின் றனர். இப்போரின் போது உலக உயிர்களுக்குத் துன்பம் நேராமல் காத்திடும் வண்ணம் ஊழிக்காலத்தில் அவன் திரு உதரத்துள் அடங்கிக் கிடப்பன போன்று உலக உயிர்கள் அவ னுள் புகுந்து அடங்கிக் கிடந் தன. குஞ்சு வெளிவராக்கா லத்தில் தாய்ப்பறவை முட்டை யைக் காப்பாற்றுவது போல அவன் அவ்வுயிர்களைக் காத்த வண்ணமே போரிட்டான்.

எனவே உலக உயிர்களை யெல்லாம் பக்குவமாய் காக்கும் நிலையில் பெருமான் போரிட் டதைச் சொல்லும் பொழுது, அவர் வெளிப்படும் பொழுது மட்டும் சீற்றத்துடன் வெளிப் பட்டார் என்று கொள்ளல் தக்க தன்று. இரணியனைக் கொல்ல வெளிப்பட்டிருப்பினும் பிரகலா தன் பொருட்டே வெளிப்பட் டார்.

எனவே 'செங்கட்சீயம்' என் பதற்கு சிவந்த கண்களை உடைய சிங்கம் என்று மட்டுமே பொருள் கொண்டால் போது மானது. கோபத்தால் மட்டும் இறைவன் கண்கள் சிவப்புறும் தன்மை உடையதன்று. இயல் பாக அவன் கண்கள் சிவந்த தன்மை உடையதே. பெரு மானை "செங்கண்மால்" என்றே எல்லா இலக்கியங்களும், ஆழ் வார்களின் பாசுரங்களும் தெரி விக்கின்றன. எனவே செங்கட்சீ யம் என்பதற்கு சிவந்த கண்க ளையுடைய சீயம் என்ற இயல் பான பொருள் கொள்ளுதலே சிறப்புடையது.

இதனைப்
பரிபாடலின் பாடல் ஒன்றின்மூ லமும் அறியலாம். திருமாலைப் பற்றிய நான்காம் பாடலில் இதன் ஆசிரியரான கடுவன் இளவெயினனார் என்னும் புல வர் திருமாலை முன்னிலைப் படுத்திப்பாடும் பாடலில் நர சிம்ம அவதார நிகழ்ச்சியைப் பாடுகின்றார். அவ்வாறு பாடும் பொழுது கோபத்தால் அல்லா மல் இயல்பாகவே சிவந்த கண் களையுடைய திருமாலே என்று பாடுகின்றார்.

"செயிர்தீர் செங்கட் செல்வ!
நிற்புகழப்
புகைந்த நெஞ்சிற் புலர்ந்த
சாந்திற்
பிருங்க லாதன் பலபல பிணிபட
வலந்துழி, மலர்ந்தோய்;...
--[பரி. 10-13]

என்று பாடுகின்றார். எனவே இயல்பாகவே சிவந்த கண்களை உடைய திருமாலே சிங்க ரூப மாக வெளிப்பட்டார் என்று பொருள் கொள்ளுவதே சிறப்பு டையதாகும்.

எனவே வாக்கினால் சொல் லவும், மனதினால் நினைக்

கவும், ஆன்ம போதத்தால் உய்த்துணரவும் முடியாதவனும், சொல்லும் பொருளும் ஆகிய இவை இரண்டிற்கும் அப்பாற் பட்டு விளங்குபவனுமான பரம் பொருள், தன் அன்பனான பிர கலாதன் பொருட்டு நரசிங்க மூர்த்தியாய் அவதாரம் செய் தார்.

உலக உயிர்கள் யாவும் தன்னை உணர்ந்து போற்றி வழிப்பட்டு உய்தல் வேண்டும் என்னும் பேரருளால் தனக்கு ரிய திருமேனியைத் தானே படைத்துக் கொண்டு, புதுமை மிக்க நரசிங்கமாகத் தோன் றினார் என்பதை உணர்தல் வேண்டும்.

இறைவனுக்குப் பகைவரும் இலர்; நண்பரும் இலர். எவ் வுயிரிடத்தும் அருளுடையவ னான அம்முதல்வன் தன் அன் பன் பொருட்டுச் சிரிப்புடனேயே தோன்றினான். நல்லோரைக் காத்தற்கும், தீயோரை அழித்தற் கும் அப்பெருமான் பின்னர் தான் சிறிது சீற்றம் கொண் டான். அச்சீற்றம் கூட, என் றும் மாறாத நிலை பெற்றுள்ள அவன் இயல்புக்குச் சற்று மாறா னது. எனவேதான் கம்பரும், நரசிங்கப்பெருமான் தன் சீற் றத்தை அடக்கிய காலத்தில் "ஒன்றாத சீற்றத்தை உள்ளே ஒடுக்கினான்" என்று கூறினார். 'ஒன்றாத சீற்றம்' என்று கம் பர் சுட்டிக் காட்டும் முகத் தான் பெருமானுக்குச் சற்றும் பொருத்தமற்ற இச்சீற்றம் உலக உயிர்கள் பொருட்டு உண்டா னதென்று உணரவேண்டும்.

தம் இளம் பருவத்திலேயே தந்தை முதலிய சுற்ற தொடர் பினை விட்டு இறைவனையே தஞ்சம் அடைந்த பிரகலாதன் வரலாறு, மானிடராய் எல்லோ ரும் உய்த்துணர்ந்து எண்ணிப் பார்க்கத்தக்கது. ❂

## ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள்

ஸ்ரீகுமரகுருபரர் பதினேழாம் நூற்றாண்டில் பாண்டிய நாட் டில் ஸ்ரீவைகுண்டம் நகருக்கு அண்மையில் உள்ள கைலாசபுரத்தில் தோன்றிய பெரும்புலவர். பிறந்து ஐந்து வயது வரை ஊமை யாக இருந்து பின் திருச்செந்தூர் முருகன் திருவருளால் பேசும் திறனைப் பெற்றவர். அதுமட்டுமல்ல. செந்திலாண்டவன் இன்ன ருளால் இன்கவிபாடும் ஆற்றலைப் பெற்றார். தென்மொழியிலும் வடமொழியிலும் இந்தி மொழியிலும் பெரும் புலமையைப் பெற்றார். திருச்செந்தூர் முருகன் மீது "கந்தர் கலிவெண்பா"ப் பாடிப் பரவினார். பல திருத்தலங்களுக்குப் பயணம் புரிந்தார். மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சி அம்மை குறம், மீனாட்சி அம்மை இரட்டை மணிமாலை முதலிய நூல்களைப் பாடி மதுரை மீனாட்சியம்மையை வழிபட்டார். மீனாட்சி அம்மைப் பிள்ளைத்த மிழை மீனாட்சி அன்னை சந்நிதியில் அரசன் திருமலை நாயக்கர் முன்னிலையில் அரங்கேற்றம் செய்தார். அப்போது அன்னை மீனாட்சியே ஒரு சிறுமி உருவில் வந்து திருமலை நாயக்கர் மடிமீது அமர்ந்து பிள்ளைத்தமிழைக் கேட்டு இன்புற்றார். கவி ஞருக்கு முத்தாரம் சூட்டி மகிழ்ந்தார். திருமலை நாயக்கரின் கோரிக்கையை ஏற்று "நீதி நெறி விளக்கம்" எனும் அரும் நூலைப் படைத்தார். திருவாரூரில் "திருவாரூர் நான்மணிமாலை"யும், வேளூ ரில் "முத்துக்குமரசுவாமி பிள்ளைத்தமிழ்" நூலையும், சிதம்பரத்தில் சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரம் செய்யுட்கோவை முதலியன பாடினார். தருமபுரம் சென்று ஆதீனத் தலைவர் ஸ்ரீமாசிலாமணி தேசிகரைத் தரிசித்து "பண்டார மும்மணிக்கோவை"ப் பாடினார். தேசிகரை ஞானாசிரியராக ஏற்று அவர் கட்டளையின்படி காசி திருத்தலத்தில் காசி மடம் நிறுவினார். காசி மடத்தின் கிளையாக திருப்பனந்தாளில் ஒரு மடம் இன்று திகழ்கின்றது. காசியில் இருந்த போது "சகலகலா வல்லி மாலை" 'காசிக்கலம்பகம்' முதலி யன அருளினார். காசிநகர் முஸ்லீம் மன்னனை நேரில் கண்டிட சிங்கத்தின் அமர்ந்து சென்றார். குமரகுருபரரின் பெருமையை அறிந்து அம்மன்னன் காசியில் கேதார மந்திரம், கேதாரத்துறை, அறச்சாலை முதலியவற்றை அமைத்திட குமரகுருபரருக்கு உதவி புரிந்தான். இவர் பாடிய பல பாடல்கள் "குமரகுருபரர் பிரபந்தத் திரட்டு" என்ற நூலில் கண்டுள்ளன.

குருவருளும் திருவருளும் கொண்டு குமரகுருபரர் பல அற்பு தச் செயல்களைப் புரிந்தார். கி.பி. 1688ல் சிவலோகப் பதவி அடைந்தார்.

சைவ நெறி தழைத்தோங்கிடவும் தமிழ்மொழி வளம் கூடி டவும் பலதுறையில் சிறந்து விளங்கிய ஸ்ரீகுமரகுருபரசுவாமி அவர்களின் அரும்பணி ஞான விளக்காய் நின்று அகிலமெலாம் ஒளி வீசுகிறது.

திரு. ஆர். சுப்பாராவ் - திருக்கோயிலூர்.

## பஞ்சோப சாரம்

1. சந்தனமிடுவது - பிருதுவிதத்துவம்.
2. புஷ்பம் போட்டு அர்ச்சித்தல் - ஆகாய தத்துவம்.
3. தூபம் காட்டுவது - வாயுதத்துவம்.
4. தீபாரதனை காட்டுவது - அக்னி தத்துவம்.
5. நைவேத்தியம் செய்வது - நீர்த் தத்துவம்.

# திருவேங்கடத் திலகம்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

திருவாய்மொழியில் 'உலக முண்ட பெருவாயா' என்ற பதி கத்தில் நம்மாழ்வார் திருவேங் கடத்துறை செல்வனிடம் சரணு கதி செய்கிறுர்.

உலகமுண்ட பெருவாயா! உலப்பில்
கீர்த்தியம்மானே!
நிலவும் சுடர்சூழொளிமூர்த்தி!
நெடியாய்! அடியேனாருயிரே!
திலதமுலகுக்காய் நின்ற
திருவேங்கடத்து எம்பெருமானே!
குலதொல்லடியேன் உன்பாதம்
கூடுமாறு கூருயே

என்ற முதற்பாடலில் ஆழ் வார் எல்லா உலகங்களைக் காக் கும் தன்மைகளைக் கொண்டுத் திலதமாய் நின்ற திருவேங்க டத்தெம்பெருமானிடம் எப்போ தும் அடிமைத் தன்மை யுடையனான தான் கிட்டும் வகையை அருளிச்செய்ய வேண் டுகிறுர். இப்பாடலில் 'கூடுமாறு கூருயே' என்ற ஆழ்வாரது ஏக்க வினாவை நெஞ்சில் கொண்டு, உலகத்தை, உண்ட பெருவாயை, உலப்பில் கீர்த்தியை, அம் மானை...... ஆழ்வார் எப் படியெல்லாம் நினைந்து உள் ளம் உருகி ஏங்கிப்பாடியிருப்பார் என்பதை ஆசார்யர்கள் தெளி வாக அறிந்து இன்சுவைமிக்க உரை வழங்கி உள்ளனர். அதில் வாதிகேசரி அழகிய மணவா ளச் சீயர் உரை வழி ஆழ்வா ரது மனத்தே எழுந்த அலமாப்பு இங்கு அநுபவிக்கப்படுகிறது.

உலகம் : பிரளய ஆபத்திலேயோ காப்பாற்றுவது? உன்னைப் பிரிந்து ஆபத்திலிருக்கும் என்னைக் காப்பாற்றலாகாதோ? உலகமெல்லாம் ஈடுபடிலோ காப்பாற்றுவது? அது என் ஒருவனுக்கு (ஆழ்வாருக்கு) உண்டானால் காப்பாற்றலாகாதோ? துக்கத்தை அறியாதாரையோ காப்பாற்றுவது? உன்னை ஆசைப்பாட்டாரைக் காப்பாற்றலாகாதோ?

உண்ட : வயிற்றிலே வைத்தோ உலகைக் காப்பாற்றுவது? உன் வடிவுகாட்டி என்னைக் காப்பாற்றலாகாதோ?

பெரு : உனது அதிகமான ஆசைக்கு இலக்காகாதவரையோ காப்பாற்றுவது? உன் பக்கலில் அதிகமான ஆசையுடையாரைக் காப்பாற்றலாகாதோ?

வாய் : வாயாலேயோ காப்பாற்றுவது? வார்த்தையாலே என்னைக் காப்பாற்றலாகாதோ?

உலப்பில்கீர்த்தி : எல்லையற்ற குணங்களை அழியமாறியோ, காப்பாற்றுவது? அந்தக் குணங்களை அநுபவிக்கும்படி செய்து என்னைக் காப்பாற்றலாகாதோ?

அம்மானே : உறவு (தலைவன் - அடியவன்) அறியாத உலகையோ காப்பாற்றுவது? உறவறிந்த விஷயத்தை - என்னைக் காப்பாற்றலாகாதோ?

நிலவும் சுடர் சூழொளி மூர்த்தி : உன் வடிவின் பெருமையறியாதாரையோ காப்பாற்றுவது? வடிவின் பெருமை அறிந்தாரைக் காப்பாற்றலாகாதோ?

நெடியாய் : உன்பெருமை உணராதாரையோ காப்பாற்றுவது? பெருமை உணர்ந்த என்னைக் காப்பாற்றலாகாதோ?

அடியேனாருயிரே : உன்னைப்பாராதபோது தரிப்பாரையோ காப்பாற்றுவது? உன்னைப் பாராதபோது தரியாத என்னைக் காப்பாற்றலாகாதோ?

திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே : கண்டு பற்றுகைக்கு அறிவில்லாதராரையோ காப்பாற்றுவது? கண்டு பற்றுகைக்கு எளியன் என்று அறிந்தாரைக் காப்பாற்றலாகாதோ?

குலதொல்அடியேன் : மற்றவர்கட்கு ஆட்பட்டாரையோ காப்பாற்றுவது? மற்றவர்கட்கு ஆட்படாது உனக்கே ஆட்பட்ட அடியாரைக் காப்பாற்றலாகாதோ?

உனபாதம் : வேறொன்றை உபாயமாகப் பற்றினாரையோ காப்பாற்றுவது? வேறொன்றை உபாயமாகக் கொள்ளாமல் உன்னையே உபாயமாகக் கொள்பவரைக் காப்பாற்றலாகாதோ?

கூடும் : வேறு பயனைக் கருதுபவர்களையோ காப்பாற்றுவது! வேறு . எந்தப் பயனையும் விரும்பாது உன்னையே பயனாக விரும்புவரைக் காப்பாற்றலாகாதோ?

ஆறு : பிரிய நினைப்பாரையோ காப்பாற்றுவது? உன்னுடன் கூட நினைப்பாரைக் காப்பாற்றலாகாதோ?

கூருயே : பெரிய தொழில்களைச் செய்தோ காப்பாற்றுவது? மாசுச: (வருந்தாதே) என்று கூறிக்காப்பாற்றலாகாதோ?

என்று பாட்டிலுள்ள சொற்க ளின் பின்னணியில் ஆழ்வார்

மனத்தே எழுந்த அலமாப்பைத் தொகுத்துக்காட்டுகிருர்.

இப்படித் துக்கம் மேலிட்டுக் கூப்பிட்ட ஆழ்வார் இரண்டாவது பாடல் முதல் ஒன்பதாவது பாடல் வரை திருவேங்கடவனது அஸாதாரண குணப்பெருமைகளை எண்ணுகிருர். திருவேங்கடவன் 'கூருய் நீராய் நிலனாகிக்கொடு வல்ல சுரர் குலமெல்லாம் சீரு எரியும் திருநேமிவலவா' என்கிற படியே எல்லா விரோதிகளைப் போக்குவதில் ஒளியுடைய பரிகரத்தையுடையவன்; 'வண்ணமருள்கொள் அணிமேக வண்ணம்' என்கிறபடியே வடிவையுடையவன்; வியப்பை உண்டுபண்ணும் குணப்பெருமையையுடையவன்; இவற்றை அநுபவிக்க மாட்டாது நெஞ்சிலே புகுந்து தித்திக்கும் அமுதாயிருப்பவன். உலக விரோதிகளுக்குத் தீங்கை விளைவிக்கும் ஸ்ரீமத்தை உடையவன்; எல்லாக் காலத்திலும் இமையோர்கள் இனமினமாய் வந்து வணங்கி சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் அடிமை செய்யும் படியாகத் திருமலையிலிருப்பவன்; 'செந்தாமரைக்கண் செங்கனி வாய் நால்தோள்' என்கிறபடியே எல்லையற்ற அவயவ சோபையையுடையவன்; என்று பலபடியாக அநுபவித்து 'அகலகில்லேன் இறையும்' என்று கீழ்வரும் பாடலில் பற்றுவதற்குத் தகுதியான பிராட்டியோடு கூடிய தன்மையும் குணப்பெருமையும் உடைய திருவேங்கடத்தானின் பூவார்கழல்களை அநந்யகதியாய்ப் பற்றினேன் என்று முறைப்படி சரணுகதி செய்கிருர் ஆழ்வார்.

அகலகில்லேன் இறையுமென்று
அலர்மேல்மங்கையுறைமார்பா!
நிகரில்புகழாய்! உலகம்
மூன்றுடையாய்
என்னை யாள்வானே!
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும்
திருவேங்கடத்தானே!
புகலொன்றில்லா அடியேன்
உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



பகவான் கூறியது:

இதம் து தே குஹ்யதமம்
ப்ரவக்ஷ்யாம்பன ஸூயவே ।
ஞானம் விக்ஞான ஸஹிதம் யஜ்-
ஞாத்வா மோக்ஷ்யஸே அசுபாத் ।। (1)

"எதை அறிந்துகொண்டு தீமைகள் எனும் அசுபத்திலிருந்து விடுபடுவாயோ, அனுபவத்துடன் கூடிய அந்த அறியும்படியான உயர்ந்த மேலான அறிவை, பொறாமைக்குணம் இல்லாத உனக்கு (நான்) நன்ருக விளக்குவேன்".

[இங்கு அசுபம் என்பது, அன்ருட உலக வாழ்க்கையில் எதிர் கொள்ளும் அல்லது தருவித்துக்கொள்ளும் தீமைகளாகும். அறியாமையால் ஏற்படும் பற்று, ஆசை எனும் காரணங்களால் விளையும் தீமைகளை, தீக்குணங்களை, அந்த பரம்பொருளை அறிநது கொள்ளும் இறையனுபவத்தால்மட்டுமே போக்கிக்கொள்ளமுடியும். இங்குப் பொருமை எனும் தீப் பண்பு இல்லாத அர்ச்சுனன் சுட்டிக்காட்டப்பட்டு, மறைமுகமாக பாராட்டப்படுகிறன். ஆம் பொருமை என்பது மனிதனின் மற்றைய உயர்ந்த பண்புகளை எல்லாம் அழித்துவிடும் ஆற்றலுடையது. அப்பொருமை எனும் பண்பே ஒருவனுடைய உயர்வுக்கு முதல் எதிரியாகும். பொருமையற்ற மனிதனின் உள்ளமே பேரறிவைப் பெற வழிவகுக்கும்.]

ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ர
மிதமுத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம்
கர்துமவ்யயம் ।। (2)

"இந்த (அறிந்துகொள்ளக்கூடிய) பேரறிவு என்பது வித்தைகளிலேயே ஓர் அரசனுக்கு ஒப்பானது. வேதங்களிலேயே

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

### ஒன்பதாவது அத்தியாயம்

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

உமைப்ரியன்

மேன்மையானது. தூய்மை விளைவிப்பதில் மிகவும் சிறந்தது. கண்களாலேயே அறியக் கூடியது. அறத்தின் வழி உபதேசிக்கப்படுவது. பின்பற்றுவதற்கு மிகவும் எளிமையானது, அழியாததும் கூட."

[எப்படி யோகங்களில் உயர்ந்தது ராஜ யோகமோ, அப்படியே வித்தைகளில் சிறந்ததான பரம்பொருளைப் பற்றிய பிரம்ம வித்தைக்கு ராஜவித்தை என்று பெயராகும். இந்தப் பரம்பொருளைப் பற்றிய பேரறிவை அறிந்து கொள்ள எல்லா மனிதர்களுக்கும் உரிமை உண்டு. இது ஒரு பொதுச்சாலை என்று கூறலாம். ஆனால் பொருமை.



கோபம், காமம், போன்ற குறைபாடுகளை உடைய மனிதர்களுக்கு இந்தப் பேரறிவானது ஒரு ரகசிய ஞானமாகிவிடுகிறது. இந்தப் பேரறிவை அறிந்தவர்கள் எல்லா வகைகளிலும் தூய்மையான நிலையை அடைவார்கள். இறை அறிவைப் பெற்ற பின்பு, அவர்களே இறைவனாகும் மிகத் தூய்மையான தன்மையைப் பெற்றுவிடுவதால், இந்தப் பேரறிவு தூய்மையாக்குவதில் தலைசிறந்த சாதனமாகத் திகழ்கிறது. இறைவனைப் பற்றிய இந்தப் பேரறிவு ஒருவனுள் கனவுலகிலிருந்து விடுபடும் விழிப்பு எனும் நிலையை உண்டாக்குவதால் அதுவே பிறவி எனும் பெரும் துன்பத்தைத் துடைத்திடும் ஆற்றலைப் பெறுகிறது. அப்பேரறிவைப் பெற்றபின்பு, உயர்ந்த வாழ்க்கையை அவன் கடைபிடிப்பதால், அவன் ஒரு தர்மவானாகப் புகழப்படுகிறான். அவனது வாக்கும், செயலும், சிந்தனையும் புனிதமாக விளங்குகின்றன. இதனால், இறைவனின் குணமாகிய பேரின்பத்தை அனுபவிக்கத் தொடங்குகிறான். அதனால் இறைவனை அறியும் வழியும் எளிமையாகவும், அவ் அறிவைப் பெற்றபின்பு அதனை யாராலும் அழிக்கமுடியாத, காலத்தாலும் வீழ்த்தமுடியாத பெருமை பெற்றுவிடுகிறது.]

*அச்ரத்ததானா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப ।*
*அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யு-ஸம்ஸார வர்த்மனி ।। (3)*

"பகைவர்களை அழிப்பவனே! இந்த (பேரறிவை அறிந்து கொள்ளக்கூடிய) தர்மத்தில் ஈடுபாடு இல்லாதவர்கள் என்னை அடையமுடியாது. அதனால் இறந்து பிறக்கும் வாழ்க்கைப்பாதையில் அல்லலுறுகின்றனர்."

[அறிந்து கொள்ளுவதற்கு முன்பு, அறிவதற்கான நாட்டமும், ஈடுபாடும், முயற்சியும் அறிந்துகொள்ள நினைப்பவனிடம் இருத்தல் அடிப்படைத் தகுதியாகும். அந்த வகையில் இறைவனைப் பற்றிய உண்மையை - இறையறிவான பரஞானத்தை அறிந்துகொள்பவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு தேவை. அவ்வாறு ஈடுபாடும் முயற்சியும் இல்லாதவர்கள் இறைவனைப் பற்றி அறியவோ அவனை அடைவதோ முடியாத ஒன்றாகும். அத்தகு மனிதர்கள் முக்தி எனும் இறுதி இன்பத்தை அடையாது, மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பு எனும் சம்சாரக் கடலிலேயே நீந்திக் கொண்டிருப்பார்கள். முக்தி எனும் கரையை அவர்களால் அடையவே முடியாது.]

*மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்தினா ।*
*மத்ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ।। (4)*

"ஐம்புலன்களுக்கு அகப்படாத - புலப்படாத அவ்யக்த மூர்த்தியாகிய நான் இந்த அண்டகோளங்கள் அனைத்திலும் பரவியுள்ளேன். ஐம்பூதங்களும் என்னுள்ளே அடக்கமாகும். அதே வேளையில், நான் அந்த ஐம்பூதங்களில் இல்லை."

[எவ்வாறு கடலில் அலைகள் அடங்கி இருக்கின்றனவோ, ஆகாயத்தில் காற்று பரந்துள்ளதோ அவ்வாறே பரமாத்வாவான இறைவனிடம், புல்பூண்டு முதல் பிரம்மன் வரை எல்லா அசையும் அசையா பொருள்கள் யாவும் அடங்கியுள்ளன. மேலும் ஐம்பூதங்களும் அவ்இறைவனிடம் அடக்கமாகும். அதே நேரத்து இறைவனோ அவற்றினுள் அடங்காதவன்.]

*ந ச மத்ஸ்தானி பூதானி பச்ய மே யோகமைச்வரம் ।*
*பூதப்ருன்ன ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவன: ।। (5)*

"ஐம்பூதங்கள் யாவும் என்னிடத்தில் நிலைத்துள்ளவை அல்ல. என்னுடைய ஈசுவர யோகத்தின் சிறப்பைக் கவனி. (அந்த) ஐம்பூதங்களை தோற்றுவித்தும், காத்தல் செய்து வரும் என்னுடைய இயல்பினை அவற்றில் காணமுடியாது."

[இச்செய்யுளில் இறைவனின் - பரமாத்மாவின் தனிச்சிறப்பு உணர்த்தப்படுகிறது. இறைவன்தான் எல்லா அசையும் அசையா பொருள்களைத் தோற்றுவிக்கிறான். அதேநேரத்து தோன்றியுள்ள அப்பொருள்களுடன் அவ்இறைவன் எந்தவிதமான தொடர்பும் அற்று விளங்குகிறான். அவைதான் பரமாத்மாவுடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. இந்தக் குணமே இயல்பே பரமாத்வாவின் யோக ரகசியம் எனும் தனிச்சிறப்பாகும்.]

*யதாகாசஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹான் ।*
*ததா ஸர்வாணி பூதானி மத்ஸ் தானீத்யுபதாரய ।। (6)*

"எப்போதும் எங்கும் பரவியுள்ள காற்றானது எவ்வாறு வானத்திற்குள்ளேயே அடங்கியிருக்கின்றதோ, அவ்வாறே ஐம்பூதங்கள் யாவும் என்னிடம் உள்ளன என்பதை அறிவாயாக."

[காற்று, நீர், நெருப்பு, மண், இவற்றில் அவை அடங்கியுள்ள

இடமான இறுதி பூதமான ஆகாயமானது எந்த வகையி லும் மாசுபடுவதில்லை. தாக் கப்படுவதில்லை. பழுதுபடுவது மில்லை. அதேபோன்று பிரம்மத் தின் மாயா செயல்கள் யாவும் பிரம்மத்தின் மீது ஆதாரப் பட்டாலும், அவற்றால் பிரம்மம் தாக்கப்படுவதில்லை, குறைவு படுவதில்லை. ஆகாச தத் துவமே, அந்தப்பரம்பொருளின் தத்துவத்தைப் புரிந்து கொள்ள உதவும் வழியாகும்.]

ஸர்வபூதானி கௌந்தேய ப்ரக்ருதிம்
யாந்தி மாமிகாம் ।
கல்பக்ஷயே புனஸ்தானி கஸ்பாதௌ
விஸ்ருஜாம்யஹம் ।। (7)

“குந்தியின் மகனே! (அர்ச்சு னனே) ஐம்பூதங்களும், அனைத்து உயிரகளும் யாவும் கற்ப முடிவில் என்னுடைய இயற்கை நிலையை அடைகின் றன. மீண்டும் அடுத்த கற்ப ஆரம்பத்தில் நான் அவற்றைத் தோற்றுவிக்கின்றேன்.”

[உலகத்தின் அழிவு பிரளயம் எனப்படுகிறது. அதுவே கற் பம் எனப்படுகிறது. இதற்கு முன்பேயே கூறியபடி பிரம்மா வுக்கு இரவு ஏற்படும் போது உலகம் அழிகிறது. அவனுக்குப் பகல் தோன்றும்போது மறுபடி யும் உயிர்களின் ஆக்கம் நிகழ் கின்றது.]

ப்ரக்ருதிம் ஸ்வாமவஷ்டப்ய
விஸ்ருஜாமி புன: 'புன: ।
பூதக்ராமமிமம் க்ருத்ஸ்னமவசம்
ப்ரக்ருதேர்வசாத் ।। (8)

“என்னுடைய இயற்கையாம் மாயைக்கு ஆற்றல் அளித்து, சுதந்திரமின்றி அந்த இயற்கை யின் வசத்திற்குட்பட்ட இந்த உயிர்கள் யாவற்றையும் மீண் டும் மீண்டும் நான் பிறப்பித் துக் கொண்டிருக்கின்றேன்.”

[இந்தச் செய்யுளில் ‘அவஷ் டப்ய’ எனும் சொல் வரு கிறது. அதாவது அருளு டையதாக, ஆய்ப்ச் உடை யதாக எனப்பொருள்படுகிறது. எப்படி நிலத்தைக் கொத்தி உழவன் வலு சேர்க்கின் றானோ கல்வி புகட்டி ஆசிரி யர் ஒருவர் மாணுக்கனுக்கு எவ் வாறு அறிவாற்றல் வளர்க் கின்றானோ அதே போன்று பரமாத்மாவின் அருளால் இயற் கையாம் மாயை அருள் வழங் குகிறது. இந்த இயற்கையின் ஆற்றலால், உயிர்கள் தங்கள் வினையின் பயனாக, அறியா மையின் காரணமாக அடிமைப் பட்டு உழல்கின்றன. அத்தகு உயிர்களை இறைவன் மீண் டும் மீண்டும் தோற்றுவித்துக் கொண்டிருக்கின்றான்.]

ந ச மாம் தானி கர்மாணி
நிபத்னந்தி தனஞ்ஜய ।
உதாஸீனவதாஸீனமஸக்தம் தேஷு
கர்மஸு ।। (9)

“தனஞ்சயா! வினைகளில் பற்று வைக்காதவனும், பொருட்படுத் தாதவன் போன்று அமர்ந்திருப் பவனுமாகிய என்னை அவை கள் (அந்த வினைகள்) கட்டுப் படுத்தமாட்டா.”

[பொருட்படுத்தாதவன் என் னும் பொருளில் உதாஸீனன் எனும் சொல் இங்கு கையா ளப்படுகிறது. வினைகளின் மீது மோகம் விட்டவர் யாராயி னும் அவன் உதாஸீனன் ஆகும். இங்கு இவ்வுயிர் யாவும் இறை வனின் மாயையால் படைக் கப்பட்டன. ஆனால் இறை வனோ அம்மாயையின் சாயல் சிறிதும் கலவாதவன். அதா வது மாயையைக் கடந்தவன். மாயையின் நியதிகளுக்கு அப் பாற்பட்டவன். ஆம், யாரொ ருவன் மாயைக்கு அடிமையா காது விளங்குகிறானோ, பற்றுக் களுக்கு அடிமையாகாது திகழ் கின்றானோ, அவன் இப்பிறவியி லேயே முக்தி எனும் பதவிக்குத் தகுதியாகின்றான்.]

மயாத்யக்ஷேண ப்ருக்ருதி: ,ஸூயதே
ஸசராசரம் ।
ஹேதுனானேன கௌந்தேய
ஜகத்விபரிவர்ததே ।। (10)

“குந்தியின் மகனே! என் மேற் பார்வையில் அமையப்பெற்ற, இயற்கையானது அசையும் அசையா பொருள்களை உடைய இந்த உலகத்தைத் தோற்றுவிக் கின்றது. இதனால் பூமியா னது சுழல்கின்றது.”

[சூரியனின் ஒளிக்கிரணங்க ளால் எவ்வாறு பொருள் கள் கண்களுக்குப் புலனாகின் றனவோ, அதேபோன்று, பர மாத்மாவின் அருளால் அவனு டைய மாயையின் ஆற்றலால் உலக உயிர்கள் தோன்று கின்றன. இவையாவும் ஒரு அரச சபையில் அரியாசனத்தில் அரசன் அமர்ந்திருக்க, அவன் ஆணையின் காரணத்தால் சுற் றும் அவை நடவடிக்கைகள் நடைபெறுவது போன்று இறை வனின் நாடகம் நடைபெறுகின் றது.]

(தொடரும்)



# அன்னமய்யா ஆனந்தித்த அவதாரங்கள்

டாக்டர் பொன். சௌரிராஜன் - திருப்பதி.

பாகவதத்தைத் தெலுங்கு மொழியில் வழங்கிய போதனா என்னும் கவிஞர் பெருமான் 'சேது லாரங்க சிவுநி பூஜிம்படேனி, நோரு நொவ்வங்க ஹரி கீர்த்தி நுடுவடேனி' என்று பாடுவார். 'கை' சே ரும்வரை சிவ பெருமானைப் பூசித்தல் வேண்டும்; வாய் நோவும் வரை திருமால் புகழ் பேசவேண்டும்' என்பதே அதன் பொருள். இவ்வாறு பூசித்துப் புகழாப் பிறவி வீண் என்பது அந்தக் கவிஞர் பெருமானின் கருத்தாகும். 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்ற திருநாவுக்கரசர் கருத்தும் இதுவே. இதனாலேயே 'அச்சுவை பெறினும் வேண்டாத' ஆழ்வாராதிகளும் 'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என்று மனநிறைவு கண்ட நாயன்மார்களும் தாம் பெற்ற இன்பம் இந்த வையகத்துக்களிக்க திவ்விய பிரபந்தங்களையும் தேவாரங்களையும் வழங்கியுள்ளனர்.

இறைவன் புகழ்பாடும் பக்தன் உள்ளம், 'அம்மா' என்ற சொல் ஒன்றிலேயே அனைத்து இன்பங்களையும் பெரும் குழந்தை ஒன்றினைப் போல 'நாராயண' 'நமச்சிவாய' என்ற நாம சங்கீர்த்தனத்திலேயே ஈடுபட்டு இறுமாந்து மகிழும். ஆனால் அதே பக்தன் கவிஞனாகவும் அமைந்துவிட்டால் பாடும் பொருள் இறை அருளாகிய ஒன்றே ஆயினும் தன் கவி மனோபாவக் கற்பனைகளுக்கு ஏற்ப எண்ணற்ற காட்சிகளில் அந்த அருள் பெருநிலையைக் கண்டு உலகுக்குக் காட்டுகின்றான். அத்தகு பக்திக் கவிஞருள் அன்னமய்ய ஒருவர்; தலைசிறந்த ஒருவர். அவர்தம் கீர்த்தனைகளில் திருவேங்கடவனைப் பல நோக்குகளில், பல தோற்றங்களில், பல உத்திகளில் படைத்துக் காட்டுகின்றார். அவற்றுள் ஒன்றே திருமால் அவதாரங்களை அழகு காவியமாக்கித் தந்துள்ள தன்மை ஆகும். அந்த அழகோவியங்கள் எல்லாம் கீர்த்தனைகளாக விளங்குவதும் ஒரு தனிச் சிறப்பாகும்.

தமிழில் ஆழ்வாரதியர் தசாவதாரங்கள் குறித்து ஆங்காங்கே மொழிந்திருப்பினும் முதன்முதல் கீர்த்தனை வடிவில் தசாவதாரங்கள் பற்றிப் பாடியருளிய பெருமை வடமொழிக் கவிஞராகிய ஜயதேவருக்கே உரியது. அவர் தம் கீதகோவிந்தத்தில் 'பிரளயபயோதி ஜலே' என்னும் கீர்த்தனத்தில் தசாவதாரங்களைப்பாடுகிறார். அமைப்பிலும், செய்யுள் நடையிலும் கீத கோவிந்தத்தை நினைவூட்டிச் செல்லும் அன்னமய்ய ஜயதேவரைப் போலத் தசாவதாரங்களையும் பாடியுள்ளார். அவற்றுள் சிலவற்றை இங்குக் காணலாகும்.

## இதோ ஒரு விந்தைக் கள்வன்!

பல்லவி

வீடிவோ இதே விந்த தொங்க
வேடிபாலு வெண்ண வெரஜின தொங்க

சரணம் 1

வெலய நீட ஜொப்பு வேசேடி தொங்க
தல காநநீக தாங்கு தொங்க
தலகக நேல தவ்வேடி தொங்க
தெலிசி சந்தெகாட திரிகேடி தொங்க
(வீடிவோ)

சரணம் 2

அடுகு கிந்த லோக மடசேடி தொங்க
அடரி தல்லிகினைன நலுகு தொங்க
அடவிலோ நெலவை யுண்ண தொங்க
தொடரி நீலி காசெதோ நுண்டு தொங்க
(வீடிவோ)

சரணம் 3

மோச மிந்துல ஜேயு முனிமுச்சு தொங்க
ராசி செக்கின குர்ரம்பு தொங்க
வேசால கிடுவச்சி வேங்கட கிரிமீத
மூசின முத்தியமை முதமந்து தொங்க
(வீடிவோ)
11-3-110

இதோ இங்கே இவன் ஒரு விந்தைக் கள்வன் (என் பக்திவலையில் அகப்பட்ட கள்வன்) காய்ச்சியபாலும், வெண்ணையும் கவரும் திரு

டன். நீருள் மறைந்து வாழும் கள்வன்; தலைமறைந்து திரியும் திருடன். நிலத்தைத் தோண்டும் (கன்னக்கோல்) திருடன். மயங்கும் மாலைக் காலத்தில் திரியும் திருடன். ஓரடியில் மூவுலகையும் அடக்கிய கொள்ளைக் காரன். தாயை மருட்டிய தனயனாம் கள்வன்; காட்டிலே வாழும் கள்வன், நீலப்பட்டு மார்பில் திகழும் கள்வன். கன்னியரை வஞ்சிக்கும் கள்வன். சிறந்த குதிரைத் திருடன். வேடம் பல பூண்டு இறுதியில் திருவேங்கட மலையில் மூடிய முத்தைப் போல அமைந்து விளங்கும் கள்வன்.

உள்ளங்கவர் கள்வனாகிய திருமாலே, இங்கு அன்னமய்யாவிடம் அகப்பட்டுக் கொண்ட திருடன்.

நிலத்தில் திரியும் திருடனாயின் தேடி, ஓடிப் பிடித்து விடலாம். நீரில் வாழும் திருடனைப் பிடிப்பது எளிதல்லவே. நீரில் குதித்தல்லவா அவனைத் தேடிப்பிடித்தல் வேண்டும். நீரில் குதித்த உடனேயே கால் ஆழ, கண்சுழல அவன் அன்பு வெள்ளத்தில் ஆழத் துவங்கிவிடுவோமே! இது மச்சாவதாரத்தைச் சுட்டும் தொடராகும்.

முகமுடியோடு உண்மை தெரியாமல் மறைந்து திரிவது கள்வர் இயல்பு. ஆமையும் தன் தலையை உள்ளே இழுத்துக் கொண்டு முகங்காட்டாது வாழும் இயல்பினது. கூர்மாவதாரத்தில் திருமாலும் மந்தாரமலையின் கீழ் தன்னை மறைத்துக் கொண்டனன். இந்த அழகெல்லாம் அமையுமாறு 'தலகாந நீக தாகு தொங்க' என்று பாடுகிறார் அன்னமய்ய.

இவ்வாறே இப்பாடலில் வராக, நரசிம்ம, வாமன முதலிய பிற அவதாரங்களும் அழகாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

இப்பாடலில் திருமாலைக் கள்வனாகப் புனைந்துரைத்த அன்னமய்ய பின்வரும் பாடலில் அவனை பூதமாகப் படைத்துக் காட்டுகிறார்.

## புவியை அகப்படுத்திய பூதம்

பல்லவி

புடமி நிந்தரி பட்டெ பூதமு-கடு
பொடவைன நல்லநி பூதமு
(புடமி)

சரணம் 1

திநிசி ஓடமிங்கெடி பூதமு
புநுக வீபு பெத்த பூதமு
கநலி கவியு சீகடி பூதமு
பொநுகு சோமபு மோமு பூதமு
(புடமி)

சரணம் 2

சேட காள்ள மிஞ்சின பூதமு
போடு தாரல பெத்த பூதமு
காடபு ஜடல பிங்கபு பூதமு
ஜாடரி நல்ல முசுகு பூதமு
(புடமி)

சரணம் 3

கெலசி பித்தலெ திரிகேடி பூதமு
பொலுபு தாண்ட்ல பெத்த பூதமு
பலுபு வேங்கட கிரிபை பூதமு
புலுகு மீதி மகா பூதமு
(புடமி)
(11-3-43)

திருவேங்கடத்தில் நின்ற வண்ணமாய் அகில உலகையும் ஆட்கொண்டருளும் திருமாலை பூதமாக உருவகித்து உருகுகிறார் இந்தக் கீர்த்தனையால் அன்னமய்ய அவர்கள்.

அகில உலகில் வாழும் அனைவரையும் அகப்படுத்திக் கொண்டது இந்தப் பூதம். மிக நீண்டு கருதத பூதம் இது; படகினை விழுங்கிய பூதம் இதுவே. ஓடு போன்ற வலிய முதுகுடைய பெரும்பூதம் இது. சீற்றங்கொண்டு பாய்ந்து பிடிக்கும் கரும் பூதம் இதுவே. அஞ்சத்தக்க முகமுடைய பூதம். முறம் போன்ற பாதமுடைய பூதம். போர் செய்யும் பூதம். பெருஞ் சடாமுடியோடு செருக்குடைய பூதம். அச்சம் ஊட்டும் கரிய முக்காடிட்டுக் கொண்டுள்ள பூதம். அம்மணமாய்த் திரியும் பூதம். தாவித்தாவிப் பாயும் பூதம். கருடன் மீது உலாவும் பூதம். அகண்டு விளங்கும் திருவேங்கடத்தில் நிலைத்து வாழும் பூதம்.

பூதம் பற்றியவர்கள் தப்ப இயலாது. ஆண்டவனால் பற்றப்பெற்ற அடியவர்களும் அவன் அருள்வயப்பட்டு அடிமையாகின்றனர்; மீளா அடிமையராய் அவன் வயத்தில் தம்மை மறந்து பித்தராய், பேயராய்த் திரிகின்றனர். திருமாலின் இந்தத் திவ்விய குணம் 'பூதம்' என அன்னமய்யாவால் இந்

தப் பாடலில் உருவகிக்கப்பெற்றுள்ளது.

சென்ற கீர்த்தனையில் அவதாரத் தோற்றங்கள் பேசப்பெற்றன. இந்தக் கீர்த்தனையில் அவதாரக் கதைகள் குறிக்கப்பெறுகின்றன.

எவ்வுயிருள்ளும் அந்தர்யாமியாகவும், எல்லாவுயிர்களையும் தன்னுள் கொண்டு விளங்கும் விசுவரூபியாகவும் திகழும் திருமால் நிலை 'புடமி நிந்தரி பட்டெ பூதமு' என்ற தொடரால் தெளிவாகும். சாதியால் தாழ்ந்த வேடனாம் குகனையும், குணத்தால் தாழ்ந்த குரங்காம் சுக்கிரீவனையும், இரக்கமில் அரக்கர் குலத்தில் தோன்றிய வீடணனையும் ஆட்கொண்டருளிய இராம அவதாரமும் இங்குக் கருதலாம். திருவேங்கடத்தில் திகழும் வேங்கடவன் எல்லாவற்றையும் தன் கவர்ச்சிக்கு உட்படுத்தி ஆட்கொண்டு அருளுதலும் இந்தத் தொடரில் அமைந்துள்ள குறிப்புப்பொருள் ஆகும்.

அடுத்துவரும் பாடல் விடுகதை பாங்கில் அமைந்து விளங்குகிறது.

## இவன் எவனோ அறியேனே!

பல்லவி

**எவ்வடோ காநி எருக ராது-கடு**
**தவ்வுலணே உண்டு தலபுலோ நுண்டு**
(எவ்வடோ)

சரணம் 1

**எடயவு தநரெக்க லெகசி போலேடு**
**கடுதாகு காநி தொங்கயு காடு**
**வடி கிந்துபடுனு சேவகுடுனு காடு**
**வெடபு கோள்ளு வெஞ்சு விடுடுனு காடு**
(எவ்வடோ)

சரணம் 2

**மிகுலா பொட்டி வாடு மிண்டிகிணி பொடவு**
**ஜகடாலு தபசி வேஷமுநுலுநு**
**மகுவகை போராடு மரிவிரக் துண்டுநு**
**தகுகாப்பு பநுலு நெந்தயு தெல்ல தநமு**
(எவ்வடோ)

சரணம் 3

**தருணுல வலபிஞ்சு தகிலி பைகொநடு**
**துரகமு தோலு ரவுதுனு காடு**
**திருவேங் கடாத்ரிபை திருகு நெப்புடுநு**
**பிரமமூர்த்தியை பரகு நீகனுடு**
(எவ்வடோ)
(11-3-8)

"அவன் யாரோ தெரியாது. ஆனால் அவன் அருகிலேயே இருக்கிறான். என்னுடைய கருத்துக்களில் நிலைத்து வாழ்கிறான். அவனுக்குச் சிறகு போன்ற செதிள்கள் உள்ளன. ஆனால் அவன் ஆகாயத்தில் பறக்கமுடியாது. அவன் பதுங்கும் பழக்கம் உள்ளவன். ஆனால் அவன் கள்ளன் அல்லன். அவன் நகங்களை வளர்ப்பவன்தான். ஆனால் பரத்தன் அல்லன். அவன் குள்ளன்தான். ஆனால் ஆகாயத்தைவிட உயர்ந்தவன். அவன் சண்டை பிடிப்பவன்தான். ஆனால் அதே வேளையில் முனிவர்களைப் போல் வேடம் போடக்கூடியவன். பெண்களுக்காகப் போர் செய்பவன். ஆனால் எல்லாம் துறந்தவன்போல் காட்சி அளிப்பவன். தன் செயல்களை ஓர் உள் நோக்கத்துடன் செய்பவன். பெண்களைத் தன்பால் இழுக்கக் கூடியவன். ஆனால் அவர்களுடைய மோகத்திற்கு ஆளாகாதவன், குதிரைகளை நடத்த வல்லவன். ஆனால் மாவுத்தன் அல்லன். அவன் யார் தெரியுமா? திருவேங்கடாசலத்தின் மேல்திரியும் பெருமாள்

கண்முன்னே வாழும் மக்கள் பேசும் வாய்மொழிச் சொற்களை அப்படியே ஆங்காங்கே எடுத்து ஆள்வது அன்னமய்யாவின் தனிச் சிறப்பாக மொழியியலார் பாராட்டுவர். அப்படியே பாமரமக்களிடம் பழகும் இலக்கிய வடிவுகளுள் ஒன்றாகிய விடுகதைப் போக்கில் இந்தப் பாடல் அமைந்திருத்தலும் ஒரு தனிச் சிறப்பாகும். பகவத் விஷயத்தைப் பாமரரும் பெற்றுத் துய்த்தல் வேண்டும் என்ற பரந்த உருக்கமே இத்தகு உத்திகளைக் கையாளுமாறு அன்னமய்யாவைத் தூண்டியது எனலாம்.

அவனுக்குச் சிறகு போன்ற செதிள்கள் என்று குறிப்பிட்டது மச்சாவதாரத்தை; பதுங்கும் பழக்கம் என்றது கூர்மாவதாரத்தை; தாழ்ந்திருப்பவன் என்பது வராக அவதாரத்தை; நகங்களை வளர்ப்பவன் என்பது நரசிம்மாவதாரத்தை; குள்ளன் தான் என்பது வாமனாவதாரத்தை. ஆகாயத்தை விட உயர்ந்தவன் என்பது திருவிக்கிரமவதாரத்தை; சண்டை பிடிப்பவன் என்பது பரசுராமன் அவதாரத்தை; பெண்களுக்காகப்

போர் செய்பவன் என்பது கிருஷ்ணவதா ரத்தை; பெண்களைத் தன்பால் இழுக்கக்கூடியவன்; ஆனால் போகத்திற்கு ஆளாகாதவன் என்பது இராமவதாரத்தை; குதிரைகளை நடத்த வல்லவன் என்பது கல்கி அவதாரத்தைக் குறிப்பவனவாகும்.

இலக்கியக் கலை தோற்றத்திற்கு ஒத்துணரும் உருக்கமே காரணம் என்பர் ஒரு நெறியார்; அன்று, இன்ப உணர்வே அடிப்படை என்பர் வேறு சிலர். எது எப்படியாயினும் இருநெறியும் இலங்குகின்றன அன்னமய்ய பாடல்களில். முன்வந்த பாடல் உள்ளத்து உருக்கம் பற்றியது எனக் கண்டோம். இங்கே இப்போது வரும் பாடல் இன்ப உணர்வைக் கொண்டு விளங்குகிறது.

## இத்தனைத் திருவிளையாடல்களும் இதற்கே!

பல்லவி

இந்நி சேதலுநு சேசெ நிந்துகொரகே-வீடு
கந்நுலநெ பொத்துபுச்சீ கநிவெ நீகொரகே
(இந்நி சேதலு)

சரணம் 1

மீநமாய செமடல மேநு முஞ்சு கொரகே
தாநே கமடமு நாய தாகு கொரகே
ஆநுகொநி கிடியாயே நதலிஞ்சு கொரகே
மாநடு கம்பமுசாட்டு மாருமோமு கொரகே
(இந்நி சேதலு)

சரணம் 2

காலு சாசே நேலமீத கமநிஞ்சு கொரகே
ஜாலி பெட்டெ சேதலநே சம்பு கொரகே
ஏலிகாய விரஹுல நெபெடி கொரகே
சைலமெத்தெ நீகுசமு லெத்தே கொரகே
(இந்நி சேதலு)

சரணம் 3

கலவெல்ல நிரசிஞ்செ கதவெ நீகொரகே
கலிகி ஆயெநு நீசங்கதி கொரகெ
வலபுல வேங்கடேஸ்வருடு லோகமுந
செலுவமுதோ மெரசெநு நீ கொரகே.
(இந்நி சேதலு)
(12-282)

இத்தனைத் திருவிளையாடல்களும் இதற்கே! இவன் கண்ணைக் காட்டியே காலம் கழிப்பவன். வியர்க்கும் மேனியைக் குளிர்விக்கவே மச்சம் ஆனான். பதுங்குவதற்காக வேதான் ஆமை ஆனான். பிறரை மிரட்டுவதற்காகவே வராகம் ஆனான். முகங்காட்ட அஞ்சியே தூணைவிட்டு வரவதே இல்லை. அனைவரும் காணவேண்டும் என்று கருதியே காலைத் தூக்கினான். தாபத்தால் கொல்வதற்காகவே இரக்கமுள்ள மொழி பேசினான். தாபத்தால் தவிக்கும் மகளிர் மேலும் வருந்தவேதான் தலைவன் ஆனான். கோவர்த்தன மலையைக் கையால் எடுத்தது மங்கையர் கொங்கைகளைப் பிடிப்பதற்கே. உள்ளதெல்லாம் உனக்காகவே துறந்தான். உன்னோடு புணர்வதற்கே மோகினியானான். உன்மீது உள்ள காதலாலேயே திருவேங்கடவன் இங்குவந்து நிற்கிறான்.

இந்தப்பாடலில் இருநெறிகள் புலப்படுகின்றன. ஒன்று பக்தைகளின் வயப்பட்டு அவன் வாடிய காதல் தாபங்கள் அவதார முறையில் காட்டப்பெறுகின்றன.

இன்னொன்று தன்னைக் காதலிக்கும் பக்தர்களுக்கு உரியவனாம் திருமால் எடுத்த அவதாரங்கள் குறிக்கப்பெறுகின்றன.

கண்ணைக் காட்டிக் காலங்கழித்தலும், விரகதாபத்தால் வியர்க்கும் மேனியை மச்சவதாரம் எடுத்து நீருள் கிடத்திக் குளிர்வித்தல் முதலியனவும் முன்வகையைச் சார்ந்தன.

பக்தனுக்காகத் தான் மோகினி ஆனதும், அவனைக் கண்டு ஆட்கொள்ள மண்ணுலகில் திருவேங்கடத் திருமலைக்கு வந்து நின்றதும் பின் நெறியைச் சாரும்.

இந்தப் பாடல் திருவேங்கடத் தல வரலாற்றையும் உட்கொண்டது ஆகும். பிருகு முனிவர் திருமாலுக்கு இழைத்த இழிவைச் சகிக்க மாட்டாமல் திருமகள் பிரிந்து வருந்திய போது, தோழி ஒருத்தி 'இறைவன் எடுத்த அவதாரம் அனைத்தும் திருமகளாகிய உனக்காகவே' என்று கூறுகின்ற போக்கில் இது அமைந்துள்ளது.

இவ்வாறு பத்து அவதாரங்களைப் பாராட்டும் பான்மையில் திருமாலைக் கள்வனாகவும், பூதமாகவும் படைத்துக் காட்டியும், விடுகதை முதலிய இலக்கிய உத்திகளைக் கையாண்டும், உருக்கம், இன்பம் முதலிய தலையாய சுவைகளைப் பயன்படுத்தியும் அன்னமய்ய பாடும் பாங்கு போற்றற்கு உரியது. ❀

Edited and published on behalf of T.T. Devasthanams by N. S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507.

